# ஹரிதாஸ ஹ்ருதய

## (பாகம் 2)

## ஜ்யேஷ்ட& ஆஷாட மாதத்திற்கான ஹரிதாச சிந்தனைகளின் தொகுப்பு

கன்னடத்தில் :

திரு.ஏ.பி.ஷ்யாமாச்சார்
பெங்களூரு

தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டவர்

'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
89044 58276. haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

# ஹரிதாஸ ஹ்ருதய
## (பாகம் 2)

ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளால்
ஸ்ரீவிஜயீந்திர தீர்த்தரின் ஆராதனை நாளான
26-06-2022 அன்று வெளியிடப்பட்டது.

**நன்றி! நன்றி!!**

ஹரிதாஸ ஹ்ருதய - பாகம் 2 புத்தகம் வெளியிட பொருளுதவி செய்த ஸ்ரீ S.பாலாஜி ராவ், அலைபேசி எண்: 98420 38404, ஸ்ரீ ஹயவதன ஸேவா ஸமிதி, அக்ரஹாரம், சிங்காநல்லூர், கோவை 5 - அவர்களுக்கு, நமது நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**

**பொருளடக்கம்**

## முன்னுரை

ஹரிதாச சாகித்யம் ஆத்யாத்ம / லௌகிக வாழ்க்கையின் பொருள் ஆகியவற்றை விளக்குவதாக இருக்கிறது. ஆகவே இன்றுவரை அந்த சாகித்யம் அழியாமல் வருகிறது. உடலில் இருக்கும் இதயம் எப்படி ரத்தத்தை சுத்தமாக்கி நாம் வாழ வழி செய்கிறதோ, அது போல இந்த 'ஹரிதாச ஹ்ருதய' நம் இதயத்தில் இருக்கும் அழுக்குகளை சுத்தமாக்க உதவுகிறது. இதில் தினத்திற்கு ஒன்று என்று சிந்தனை இருக்கிறது. இதில் இருப்பது விஷயங்களின், தத்வங்களின் சாரம் / சுருக்கம் மட்டுமே.

ஹரிதாஸ ஹ்ருதய என்னும் இந்தப் புத்தகத்தை கன்னடத்தில் எழுதியவர் திரு.ஏ.பி.ஷ்யாமாச்சார் அவர்கள். ஒரு ஆண்டில் வரும் 360 நாட்களில், நாளுக்கு ஒன்று என மொத்தம் 360 சிறிய கட்டுரைகள் இதில் உள்ளன. சைத்ர & வைஷாக மாதத்தின் கட்டுரைகள் பாகம் 1ல் வெளிவந்தன. இந்த பாகம்-2ல் ஜ்யேஷ்ட & ஆஷாட மாதங்களின் கட்டுரைகள் உள்ளன.

ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள், பண்டிகை, விரத நாட்களில் - அந்தந்த ஹரிதாசர்களைப் பற்றி / பண்டிகை விரதங்களைப் பற்றி மற்ற ஹரிதாசர்கள் பாடிய குறிப்புகள் இதில் உள்ளன. மத்வ சித்தாந்தக் கருத்துகள் அனைத்தையும் பற்றியும் ஹரிதாசர்கள் பாடியுள்ளனர். அவை அனைத்தும் இந்தப் புத்தகத்தில் மேற்கோள் காட்டப்பட்டுள்ளன. இந்த முழுப் புத்தகத்தையும் படித்தால், ஹரிதாசர்களின் கருத்துக்களின் வழியே, நம் மத்வ சித்தாந்த தத்வங்களை சுலபமாக அறியலாம்.

அனைவரும் இந்தப் புத்தகத்தை படித்து, அடுத்து வரவிருக்கும் பாகங்களையும் வாங்கிப் படிக்கவேண்டும் என்று விரும்புகிறோம். அனைவருக்கும் ஹரிவாயு குரு ஹரிதாசர்களின் அருள் என்றைக்கும் கிடைக்கட்டும் என்று ஸ்ரீஹரியிடம் வேண்டிக் கொள்கிறோம். ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**15-06-2022** **'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

**ஜ்யேஷ்ட சுத்த ப்ரதிமை**

**ஆத்ம நிவேதனம்**

ஹரிதாச சாகித்யம் முழுவதற்கும், ஹரிதாசங்கள் தங்களின் ஆத்ம நிவேதனையை ஸ்ரீஹரியிடம் சமர்ப்பிப்பதைக் காண்கிறோம். இதுவே ஹரிதாச பாவத்தின் லட்சணம் என்றும் சொல்லலாம். ஹரிதாசர்களின் சில வாக்குகளைப் பார்க்கலாம். கனகதாசர் 'ஆத்மநிவேதகனதிக பக்தியுண்டே' என்றது மிகச் சிறப்பு.

நீனே கதி நீனே மதி ஸ்வாமி |
நீனில்லதன்யத்ர தெய்வகள நானரியே ||
எந்தெந்திகு நின்ன தாசனாகபேகோ |
புரந்தரவிட்டலா சரணவனு தோரபேகு || -- ஸ்ரீபுரந்தரதாசர்

தந்தெயாகி தாயியாகி இந்திரேஷனெ எனகெ |
பந்துவாகி பளகவாகி சிந்துஷயனனெ எனகெ || -- ஸ்ரீவியாசராஜர்

என்ன மன விஷயகளலி முளுகிதோ
என்ன தனு வ்ருத்தாப்யவனு இடிதோ
அந்தகர கரெ பாஹோ ஹொத்தாயிதோ
காலவிளம்பன வினிதில்லவய்ய வியாள்யவரிது பின்னஹ மாடித|| -- ஸ்ரீபாதராஜர்

நின்னனெ நம்பிதெ கிருஷ்ண அன்யரொப்பர காணே
பன்னங்கசயன ஸ்ரீவக்ஷ பாரோ
இருளு ஹகலு நின்ன சரணக்கெ மொரெஹொக்கெ
சரியாரோ ஈரேளு புவனதொளு ஹயவதன || -- ஸ்ரீவாதிராஜர்

தனு நின்னது ஜீவன நின்னது ரங்க |
அனுதினதலி பாஹ சுகதுக்க நினதய்ய || -- கனகதாசர்

நின்ன சித்தக்கெ பந்ததனு மாடு சர்வேஷ
என்ன ஸ்வாதந்த்ர லவமாத்ர உண்டே ஸ்வாமி || -- விஜயதாசர்:

பார நின்னது என்ன எல்லி நீனிரிசிதரு
சாரி மொரெ இடுவெ லாலிஸு பின்னப || -- கோபாலதாசர்:

தாசோஹம் தவ தாசோஹம் தவ தாசோஹம்
பின்னயிபெ நினகானு பக்தி பந்து |
நிலுவாக குளிதாக மலகி சுகதிந்த நலிதாக
பக்தவத்ஸல நின்ன மஹிமெகள திளிவந்தெ மாடய்ய || -- ஜகன்னாததாசர்:

**ஜ்யேஷ்ட சுத்த த்விதியை**
**உன் சிந்தனையைக் கொடு**

'தாசன மாடிகோ என்ன ஸ்வாமி', 'ஹரிஸ்மரணெயில்லதே பாளி பதுகிதரேனு' என்று புரந்தரதாசரில் துவங்கி பின் வந்த அனைவரும் ஸ்ரீஹரியிடம் இதையே வேண்டினர். இதுவே நம் வேண்டுகோளாகவும் இருக்கவேண்டும்.

அடிகடிகே நா நின்ன அடிகளனே நம்பிதெ
தோரய்யா எனகெ சுசித்த சித்தஜனய்யா
எடபிடதெ நின்னங்க்ரி சென்னாகி பூஜிஸி
எடெகடிப லிங்கவன்னு பந்திஸிகொண்டு
படிவார நின்னவனெம்போ மாதனெ கேளி
சடகரதி மெரெத தாசன்ன மாடய்ய
பிடௌஜபதி சிரி விஜயவிட்டல ஸ்வாமி
பரிஸோ பரிஸோ நின்ன ஸ்மரணே || -- ஸ்ரீவிஜயதாசர்

ஸ்ரீஹரியே, எப்போதும் உன்னையே நம்பியிருக்கிறேன். உன் பாதாரவிந்தங்களையே பிடித்திருக்கிறேன். அனைவருக்கும் அனைத்து காலத்திற்கும் நீயே கதியானதால் உன்னை விடமாட்டேன். என்னை காப்பாற்றும் பொறுப்பு உன்னுடையது. உன் சிந்தனை எனக்கு எப்போதும் இருக்கட்டும். சரணாகத- வத்ஸலனான உன்னிடத்தில் வேண்டுகிறேன்.

த்ராஹி த்ராஹி ஜகன்னாத வாசுதேவ அச்யுதாவ்யய |
மாம் சமுத்தர கோவிந்த துக்க சம்சார சாகராத் ||

நான் உன்னுடையவன் என்று சொல்கிறேன். மகிழ்ச்சியுடன் வலம் வருவேன். என் பேச்சை உறுதிப்படுத்த என்னை தாசனாக ஏற்றுக்கொள். நீ பிடௌஜபதி (தேவதைகளின் தலைவன்). என்னைப் போன்றவர்களை விடாமல் காப்பாற்று. ஏனென்றால் எனக்கு நீயே கதி.

சதா என்ன ஹ்ருதயதல்லி வாசமாடோ ஸ்ரீஹரி ||
நீனே கதி நீனே மதி ஸ்வாமி | நீனில்லதன்யத்ர தெய்வகள நானரியே ||
-- ஸ்ரீபுரந்தரதாசர்

இதனை அறிந்து ஸ்ரீஹரியிடம் வேண்டுவது என்னவென்றால் --
சேவகனெலோ நானு, நின்ன பாத சேவே நீடெலோ நீனு || -- ஸ்ரீவாதிராஜர்

இதைப் போலவே - ஸ்மரணெயொந்தே ஸாலதே கோவிந்தன நாம ஒந்தே ஸாலதே - என்று தாசர்கள் தழுதழுத்த குரலில் வணங்கி, ஸ்ரீஹரியின் அருளைப் பெற்றனர்.

**ஜ்யேஷ்ட சுத்த த்ருதியை**

**பலவிது பாளுதக்கே**

வாழ்க்கை அழகாவதற்கும், சத்கர்மங்கள் நிறைவேறவும்; சாதனைகள் நற்பலன்களைக் கொடுப்பதற்கும் தேவையான வழிமுறைகளை 27 பத்திகளில் பொதித்து, சஜ்ஜனர்களுக்கு அறியவைத்த மஹானுபாவர் ஸ்ரீஜகன்னாததாசர். அவரது அபூர்வமான கிருதியே 'பலவிது பாளுதக்கே'. அவரது சிறந்த கிருதியான ஹரிகதாம்ருதசாரத்தின் சுருக்கமாக வந்த இந்த கிருதியை அணுஹரிகதாம்ருதசாரம் எனலாம். வாழ்வதற்கு உண்மையான பலன் என்ன என்பதை விவரிக்கிறார். தத்வங்களின் குவியல் இதில் உள்ளது. சில பத்திகளை மட்டும் பார்ப்போம்.

பலவிது பாளுதக்கே சிரி
நிலயன குணகள திளிது பஜிசுவுதே ||

அற்புத மற்றும் எண்ணிக்கையற்ற நற்குணங்களைக் கொண்ட லட்சுமிபதியான ஸ்ரீஹரியை தெளிவாக அறிந்து அதை போற்றுவதே வாழ்க்கையின் பொருள். உலகமே இவன் கீழ் இயங்குகிறது. அனைத்து

ஜீவிகளும் இவனின் சேவகர்கள். தக்க ஆதாரங்கள் மூலம் தெரிந்து போற்றுவதே - பலவிது பாளுதக்கே. மனிதனாப் பிறந்து வாழ்வதற்கு உண்மையான பலன் இதுவே.

ஸ்வோச்சித கர்மகளாசரிசுத பலு
நீசரல்லிகே போகி யாசிஸதே...

இது வேதங்களின் செய்தி. அனைவரும் தங்கள் ஆசிரமத்திற்கு தக்கவாறு நடக்கவேண்டும். என்றும் எதற்கும் யாரிடமும் கையேந்தக்கூடாது. ஏனெனில் அனைத்து ஜீவர்களையும் காப்பாற்றுபவன் ஸ்ரீஹரி.

துச்ச விஷயகள இச்சைசதே
யத்ருச்சா லாபதிம் ப்ரோச்சனாகுவுதே ||

'தேனத்யக்தேன புஞ்ஜீதா' - ஸ்ரீஹரி கொடுத்ததை வைத்து திருப்தியாகு. நான் ஸ்ரீஹரியின் தாசன் என்று கர்வத்துடன் சொல். இந்த உலகம் உண்மை. எப்போதும் நம் சிந்தனை இப்படி இருக்கட்டும்.

ஹ்ருதயதி ரூபவு வதனதி நாமவு உதரதி நைவேத்யவு சிரதி
பதஜல நிர்மால்யவனே தரிஸி கோவிதர சதன ஹெக்கணவ காயுவுதே --
பலவிது பாளுதக்கே

'சங்கவாகலி சாது சங்கவாகலி' என்பது போல் சஜ்ஜனர்களின் நட்பு இருக்கவேண்டும். இது ஸ்ரீஹரியைப் பற்றிய ஞானத்தை வளர்க்கிறது. சூர்யந்தர்கதனான ஸ்ரீஹரியை, காயத்ரி மந்திரத்தின் மூலம் நினைக்க வேண்டும். பிறவி எடுத்ததன் பலன் இதுவே என்கிறார். அனைத்தையும் ஸ்ரீஹரிக்கே அர்ப்பிக்க வேண்டும்.

'க்ளேஷானந்தகள ஈஷாதீன' - சுக, துக்கங்களுக்கும் ஸ்ரீஹரியே காரணன். லட்சுமி, பிரம்மாதிகள் அவனது சேவகர்கள். அனைத்து ஜீவர்களுக்கும் தலைவனான ஸ்ரீஹரியை யாரும் முழுமையாக அறியமுடியாது. இப்படி அறிவது இப்பிறவியின் பலன். அனைத்து நற்குணங்களைப் பெற்றிருப்பவனும், விராட ரூபத்தைக் கொண்டவனுமான ஸ்ரீஹரிக்கு சமமோ, உத்தமரோ யாரும் இல்லை.

அனைத்து வேதங்களாலும் புகழப்படுபவன். அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கும் ஸ்ரீஹரி, அனைவரிலும் அடங்கியிருக்கிறான்.

பவனமதானுகரவனா...

மகிழ்ச்சியைக் கொடுக்கும் சித்தாந்தத்தைப் பின்பற்றுபவர் என்னும் கர்வம் நமக்கு இருக்கவேண்டும். பிறவி எடுத்ததன் பலன் இதுவே. செய்பவன் & செய்விப்பவனாக இருக்கும் ஸ்ரீஹரி, அனைவருக்கும் வலிமையைக் கொடுப்பவனாக இருக்கிறான்.

பிரதிதிவஸதி ஸ்ருதி ஸ்ம்ருதிகளிந்த...

படைத்தல், காத்தல், அழித்தலுக்குக் காரணனான ஸ்ரீஹரி, அனைத்து வேதங்களாலும் போற்றப்படுகிறான்.

பன்னகாசல சுனன்னிவாச பாவன சரித சத்குண பரித |
ஜன்யஜனக லாவண்யேக நிதி ஜகன்னாதவிட்டல நான்யனெம்புதே ||
பலவிது பாளுதக்கே

பவித்ரமான சரித்திரத்தைக் கொண்ட ஸ்ரீஹரியின் ஞானத்தைப் பெற்று நாம் பவித்ரம் ஆவோமாக.

இப்படி பல ஆதாரங்களுடன் கூடிய, 27 பத்திகளைக் கொண்ட இந்த கிருதியை மனப்பாடம் செய்து, இதன் பொருளை உணர்ந்து, அதன்படி நடந்து, ஸ்ரீஜகன்னாதவிட்டலனின் கருணைக்கு பாத்திரர் ஆவோமாக.

**ஜ்யேஷ்ட சுத்த சதுர்த்தி**

**ஸ்ரீஹரியின் விஸ்வரூபம்**

ஸ்ரீகிருஷ்ணன் அர்ஜுனனுக்காக காட்டிய விஸ்வரூபத்தை அர்ஜுனன் எப்படி கண்டான்? ‘பஷ்யாமித்வாம் சர்வதோ அனந்தரூபம்’ என்று அனந்தமாக கண்டதை வர்ணித்தான். திவ்ய கண்களைக் கொடுத்து அர்ஜுனனை பார்க்கச் செய்தான் கிருஷ்ணன்.

விஸ்வதஸ் சக்ஷுருத விஸ்வதோமுகோ விஸ்வதோ பாஹுருத விஸ்வத:ஸ்பாத் |

ஸம் பாஹுப்யாம் தமதி ஸம் ப்ரதத்ரை: த்யாவாபூமீ ஜனயன் தேவ ஏக: || (ரிக் 10-81-3)

கீதையின் 11ம் அத்தியாயத்தின் உரையைப் போல, ஸ்ரீபுரந்தரதாசர் இந்தப் பாடலில் ஸ்ரீகிருஷ்ணின் விஸ்வரூபத்தை வர்ணித்திருக்கிறார்.

அனந்த முகுட அனந்த ஷிரஸ்ஸு அனந்த நயன
அனந்த நாசிக அனந்த கர்ண அனந்த வதன
அனந்த கம்பு அனந்த கந்தர அனந்த ஸ்ரீதேவி
ஸ்ரீகந்த ஸ்ரீவத்ஸ ஸ்ரீதுளசி வைஜயந்தி
மாலெயந்தொப்பிஹன அனந்த | அனந்த
பாஹு முத்ரே அனந்த ஷங்க அனந்த சக்ர
அனந்த வ்ருக்ஷ அனந்த குக்ஷி அனந்த நாபி
அனந்த கடியு அனந்த ஊரு அனந்த ஜானு
அனந்த ஜங்க அனந்த சரண அனந்த பெட்யதிந்தொ
ப்புவ ஹொரெ ஔகிப்பனோ புரன்
தர விட்டலராய நொப்ப அனந்த || -- ஸ்ரீபுரந்தரதாசர்

ஸ்ரீகிருஷ்ணனின் விஸ்வரூபத்தின் காட்சியை ஸ்ரீகோபாலதாசர் இவ்வாறு வர்ணிக்கிறார்.

விஷ்வதோ முக நீனே, விஷ்வத: சக்ஷு நீனே
விஷ்வதோ பாஹு நீனே, விஷ்வதோ ஹஸ்த நீனே
விஷ்வதோ ஸ்ரவண நீனே, விஷ்வாதாரக நீனே
விஷ்வவியாபக சர்வ விஷ்வமயனு நீனே
விஷ்வ நாமக ஹரி கோபாலவிட்டல
விஷ்வாஸ கொடு நின்ன விஷ்வசரணதல்லி || -- ஸ்ரீகோபாலதாசர்

**ஜ்யேஷ்ட சுத்த பஞ்சமி**

**நீயே எனக்கு கதி**

சதத சன்மார்கத பதவனு தோரிஸி
கதியாரு தஷப்ரமதி முனிராயா -- ஸ்ரீ கோபாலதாசர்

குழப்பமயமான வாழ்க்கை. யார் சரி யார் தப்பு என்று தெரியவில்லை. எதை செய்வது எதை விடுப்பது என்று புரியவில்லை. யோசித்து சிலவற்றை செய்தாலும், அது தவறாக முடிகிறது. எதிலெடுத்தாலும் சந்தேகம். இப்படிப்பட்ட சூழ்நிலையில் நான் என்ன செய்வது? இதற்கான பதில் என்ன? நம்மிடம் இருக்கும் குறைவான ஞானம். சரியான வழிகாட்டி இல்லாதது.

நம்மிடம் இல்லாததை, அதாவது ஞானத்தை, சரியானவர்களிடமிருந்து பெற்றால் மட்டுமே மேற்கண்ட கேள்விகளுக்கு தீர்வு கிடைக்கும். சரியான வழிகாட்டியை கண்டுபிடிப்பது சிரமமான விஷயமே. ஆனால் இந்த விஷயத்தை ஹரிதாசர்கள் செய்து காட்டியிருக்கிறார்கள். அவரே, ஜீவோத்தமரான வாயுதேவர். இவரே கலியுகத்தில் ஸ்ரீமதானந்த தீர்த்தர் என்று அவதரித்து, தத்வவாதத்தை நிறுவினார். அதற்காகவே தாசர் 'சன்மார்க்கத பதவ தோரிஸி' என்று கூறினர். ஏனெனில் இவர் பூர்ணப்ரக்ஞர். அனைத்தையும் தெளிவாக அறிந்தவர் மற்றும் சஜ்ஜனர்களுக்கு அதை அப்படியே சொல்ல வல்லர்.

இவரே இன்னொரு பாடலில் - 'சதத ஷ்ரவண ஹரிகதாயல்லிரிஸி பதவல்லிடிசய்ய' என்று கேட்கிறார். 'சர்வரிகெல்ல ப்ரிய மார்கவ தோரி மெரெவ மாதரிஸ்வ' என்று இவரே நமது வழிகாட்டி என்று சொல்கிறார். தசப்ரமதி, பூர்ணப்ரக்ஞர் என்று அறியப்படும் ஸ்ரீமத்வரின் பாதங்களில் நாம் சரணாகதி அடைந்தால், நம் வாழ்க்கை சரியாகும். அதற்காகவே தாசர் 'மாருதிய நம்பிரோ ! மாருதி மார்கயேருவ சுஜனரெல்ல |' என்றார். தேவையான ஞானம், ஆனந்தத்தை கொடுக்கும் மத்வரை - நீரே கதி என்றனர் தாசர்கள். 'யதியே எனகே நீனே கதியே அல்லாதன்னே அப்ரதியெ நா காணெ யென்னேக் ஷிதியொளிரிஸி நோடு |' நீங்களே என் கதி என்று வேண்டினர். இந்த சித்தாந்தத்தை பின்பற்றி சத்கதியை அடையுங்கள் என்று வழிகாட்டியானார் மத்வர்.

ஸ்ரீகோபாலதாசர் பின்பற்றிய வழியே அனைவருக்கான வழி என்றானது. உபநிஷத்தின் உபதேசமும் இதுவே. காரணம்

வாயுதேவர் எப்போதும் ஸ்ரீஹரியுடனே இருந்து அனைத்தையும் நடத்துகிறார். இறுதியில் ஸ்ரீஹரியிடம் நம்மை அழைத்துப் போவதும் அவரே. வாயுதேவரே மத்வராகி வந்து நமக்கெல்லாம் சிறந்த வழிகாட்டியாக இருக்கிறார்.

**ஜ்யேஷ்ட சுத்த சஷ்டி**
**ஸ்ரீமோகனதாசரின் புண்யதினம்**

மோஹபய துக்காதி தூரம் லோஹலோஷ்ட சமீக்ஷணம் |
மாஹிதாங்க்ரி சரோஜ ப்ருங்கம் மோஹனார்ய குரும் பஜே ||

விஜயதாசருக்குப் பிறகு ஹரிதாச பரம்பரையை முன்னெடுத்தவர்களில் மோகனதாசரும் ஒருவர். விஜயதாசரின் வளர்ப்பு மகன், செல்ல மகன் தவிர ப்ரிய சிஷ்யனும் ஆகி, உயிர் இருக்கும்வரை குருவின் சேவையைச் செய்த மகான். மோகனவிட்டல அங்கிதத்தில் பற்பல பாடல்களை இயற்றி சாகித்யத்தை வளர்த்தார். 217 பத்திகளுடைய தாசரின் தீர்க்க க்ருதி - கோலு ஹாடு - பல அற்புத விஷயங்களை உள்ளடக்கி புகழ்பெற்றிருக்கிறது. பின்வந்த ஹரிதாச பரம்பரையினர் இவரை பக்தியுடன் வணங்கி தன்யர் ஆகியிருக்கின்றனர். 'யுக்தியல்லி மோஹன்னா' என்று பெயர் பெற்ற தாசர், தம் வளர்ப்புத் தந்தை - குருவான விஜயதாசரை பற்பல பாடல்களில் புகழ்ந்துள்ளார். பலருக்கு தாசதீட்சையைக் கொடுத்து பரம்பரையை வளர்த்தார். இன்னும் இவரின் பரம்பரையினர், விஜயதாசர கட்டெயில் அவரது சேவையை செய்து வருகின்றனர். இவரின் காலம் கிபி 1728-1815.

மோகனதாசரைக் குறித்து பாடிய பிராணேசதாசரின் பாடல்.

பாஹி பாஹி பாஹி குரு | குரு
மோஹன ராய பாஹி பாஹி ||ப||
பாஹி பாஹி குருமோஹன சிந்தூர
ஸ்ரீஹரி பாத பங்கேருஹ பஜக ||அப||
நவவித பகுதியிந்து சரபளிகளொளு
நவனவ ரூபதி நலிவ சுதீர ||1||
பதுமனாபன த்யானவ மதவேரி
பதோபதிகெ ஹரிபதாவகாஹே ||2||

விஜயதாசர பதரஜவ தரிசி நீ
ரஜ ப்ராணேச விட்டலனிரிசிதி ||3||

இவரது சுமார் 80 பாடல்கள் கிடைத்திருக்கின்றன. அவற்றில் சில தத்வங்கள் நிறைந்த நீண்ட பாடல்கள் ஆகும். ஸ்ரீவிஜயதாசர் கட்டெயில் சுமார் 60 ஆண்டுகள், கோபாலகிருஷ்ணனை பூஜித்த தன்யர். இவரது கட்டெயும் அங்கேயே இருப்பது சிறப்பு. பல க்ஷேத்திரங்களை தரிசித்து, தாச தர்மத்தை பரப்பினார். தீர விட்டலர் - அலவபோதர தத்வனெலெ எந்தே பரிசுதலி இருள்ஹகலு நித்ய ஸ்மரிஸி - என்றால், பிராணேச தாசர் - நவவித பகுதியிந்து சரபளிகளொளு, நவ நவ ரூபதி நலிவ சுதீரா - என்று வர்ணிக்கிறார்.

**ஜ்யேஷ்ட சுத்த சப்தமி**

**பார்த்து அறிந்து நட**

ஜட பதார்த்தங்களிலிருந்தும் நாம் அறியவேண்டியது பல இருக்கின்றன என்று பாகவதம் சொல்கிறது. அவற்றில் ஒன்று 'தத்வங்கள்' எனத் தெரிகிறது. இப்படி 24 குருகள் இருக்கின்றனர் என்று ஸ்ரீகிருஷ்ணன் உத்தவருக்கு உபதேசம் செய்கிறான். இதையே விஜயதாசர் - 'ப்ருதிவ்யாதி தத்வங்களிந்த கலியுவுதிதே' - என்றார்.

தரணியந்தே தாளோ மருதனந்தே சம்
சரிஸு பாவகனந்தே ஹொரகெ தோரதிரலி
மரளி உதகதந்தெ ஹரிது போகுதலிரு
இரு ஆகாஷதந்தே சன்சதலி தூர
பரரபேக்ஷய பிடு பரலோகவ பேடு || -- ஸ்ரீவிஜயதாசர்

தாசர் விளக்கியிருக்கும் இந்த பஞ்சபூதங்களின் குணங்களை நாம் வாழ்க்கையில் பின்பற்றினால் எதையும் சாதிக்கலாம் என்பர். இதன்படி ஒரு அர்த்தத்தில் இவை நமக்கு குரு என்றே சொல்லலாம்.

பூமிக்கு இருக்கும் பெரிய குணம் என்னவென்றால் மன்னித்தல். பூமியில் எத்தனை அழுக்குகள் சேர்ந்தாலும் பொறுத்துக்கொண்டு,

அனைவரையும் மன்னித்து, ஆதரவு அளிக்கிறது. காற்று எதற்கும் அஞ்சாமல் எப்போதும் சுற்றிக் கொண்டிருக்கிறது. நறுமணம், துர்மணம் என்று பார்க்காமல் அதை பரப்பும் வேலை மட்டும் செய்கிறது. ஜீவரும் சுக, துக்கங்களில் மூழ்கிவிடாமல், இரண்டையும் ஒன்றாகவே கருதவேண்டும். நீர் தானே சுத்தமாகி, வழியில் பார்க்கும் அழுக்குகள் அனைத்தையும் சுத்தமாக்குகிறது. இது போல ஜீவரும் சுத்தமான மனம் உள்ளவராக வேண்டும். தேஜஸ் என்றால் அது நெருப்பு. எப்போதும் சுத்தமாக இருக்கிறது. தான் சேரும் அனைத்தையும் சுத்தமாக்கும் பொருள். தன் பவித்ரத்தை இழக்காமல், பிற பொருட்களை சுத்தமாக்கும் குணம் கொண்டது. மனிதன் தானும் சுத்தமாக இருந்து, சம்பந்தப்பட்ட பிறரையும் சுத்தமாக்க வேண்டும். ஆகாயம் அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கிறது. அனைத்து பொருட்களுக்கும் இடம் அளித்திருக்கிறது. எப்போதும் தூய்மையாக இருக்கிறது. இந்த குணம் மனிதனுக்கு மிகவும் அவசியம். இந்த குணத்தால் அனைத்தையும் சாதிக்கலாம்.

இப்படி பஞ்சபூத குணங்களை அறிந்து, அவற்றை வாழ்க்கையில் பயன்படுத்தினால், கண்டிப்பாக நலம் உண்டாகும். இந்த பூதாபிமானிகளின் அருளும் மற்றும் இவற்றை கட்டுப்படுத்தும் ஸ்ரீஹரியின் ரூபங்களின் அருளும் முக்கியமானதாகும்.

ஸ்ரீவிஜயதாசர், ஜடப் பொருட்களிலிருந்தும் பாடம் கற்று முன்னேறி, பிறருக்கும் சொல்லிய விதத்தை அறிந்து, நாமும் அப்படியே ஆகவேண்டும்.

**ஜ்யேஷ்ட சுத்த அஷ்டமி**

**சாது சங்கவாகலி**

அச்யுதாங்க்ரி நிஷ்டர யத்ருச்சாலாப துஷ்டர |
நிஸ்சய ஞானவந்தர அச்ச பாகவதர நித்ய ||
சங்கவாகலி சாது சங்கவாகலி || -- ஸ்ரீ பிரசன்ன வேங்கட தாசர்

சுகமான வாழ்க்கை அமையவேண்டும் என்பது அனைவரின் விருப்பம். ஆனால் இந்த சுகம் எப்படி கிடைக்கும் என்று அறிவது முக்கியம். யாரின் நட்பின் மூலம், யாரின் வழிகாட்டுதலில், யாரின் நடவடிக்கைகளால் இந்த சுகம் கிடைக்கும் என்று தாசர் இந்தப் பாடலில் கோடிட்டுக் காட்டுகிறார்.

அச்யுத (அழிவு இல்லாதவன்; என்றும், யாராலும் அழிக்க முடியாதவன்) என்னும் ஸ்ரீஹரியை, மற்றும் அவனை நம்பி நடக்கும் சஜ்ஜனர்களின் நட்பு – அனைத்திற்கும் மூல காரணமாக இருக்கிறது. ‘அன்யதா சரணம் நாஸ்தி த்வமேவ சரணம் மம’ என்று அவனே கதி என்று அறிந்தவர்கள் மற்றும் ‘தேனத்யக்தேன புஞ்சீதா:’ என்று ஸ்ரீஹரி கொடுத்ததில் திருப்தி அடைந்து – அதாவது மற்றவரிடத்தில் எப்போதும் கையேந்தாமல் இருப்பவர்களின் நட்பை இழக்காதீர்கள் என்று கூறுகிறார். இவர்களால் நம் வாழ்க்கை நல்வழியில் செல்லும். வேத சாஸ்திரங்களை ஆதாரமாக அறிந்தவர்கள் ‘உண்மையான ஞானம் கொண்டவர்கள்’. இவர்களுக்கு சந்தேகம், பிரமை என்றும் இருக்காது. ஸ்ரீஹரியின் இருப்பை, அவனின் பக்தர்களின் நடவடிக்கைகளை நன்கு அறிந்திருப்பர். இத்தகையவரின் நட்பு, பழக்கவழக்கத்தினால் மட்டுமே உண்மையான ஞானம் கிடைக்கிறது. என்றால் வாழ்க்கையில் இத்தகைய மஹாபுருஷர்களின் பழக்கம் முக்கியம். அதற்கே தாசர் இவர்களின் நட்பில் இரு என்றார்.

தாசரின் இன்னொரு சுவாரசியமான சொல் – ‘அச்ச பாகவதர’. இவரை பாகவதோத்தமர், பாகவத அர்த்தத்தை அறிந்தவர் என்று அழைக்கிறார். உண்மையில் இவரே சாது. உத்தமர். ஸ்ரீஹரிக்கு அருகில் இருப்பவர். பொறாமையற்று, ஸ்ரீஹரியிடம் மனதைக் கொடுத்து, அனைத்திலும் ஸ்ரீஹரியைக் கண்டு, அவனின் ஆணைப்படி வாழ்பவராக இருக்கிறார். இத்தகையவரின் பழக்கம், நட்பு, இங்கும் மறுஉலகத்திலும் சுகத்தையே அளிக்கிறது என்பதில் சந்தேகமில்லை. இதற்கே தாசர் ‘சங்கவாகலி சாது சங்கவாகலி’ என்று நமக்கு சரியான வழியைக் காட்டுகிறார்.

**ஜ்யேஷ்ட சுத்த நவமி**
**சஜ்ஜனர்களின் நட்பு கிடைக்கட்டும்**

‘சங்கவாகலி சாது சங்கவாகலி’ இதுவே அனைத்து சஜ்ஜனர்களின் வேண்டுகோளாகும். வாழ்க்கையின் அனைத்து நிலைகளிலும் இது மிகவும் முக்கியமாகும். புரந்தரர் - ‘சாது சஜ்ஜன தொளகிருவுதே ஹப்ப’ என்று கொண்டாடுகிறார்.

சஜ்ஜனர சங்க நீடோ சர்வபாலகனே
முத்து கோபிய கந்த மூர்ஜகதொள் வந்த்ய
துஷ்டஜன சிக்ஷகனே சிஷ்யர சம்ரக்ஷகனே
இஷ்ட பலதாயக இந்திரே காந்தனே
கஷ்ட தாரித்ர்ய சம்ஹார பய பேதகனே
ஸ்ருஷ்டிஸ்திதிலய கர்த்ரு யுதிஷ்டிரனனுஜன சகனே || -- ஹரபனஹல்லி பீமவ்வா

ஹரிதாசி பீமவ்வா ‘சஜ்ஜனர சங்க நீடோ’ என்று வேண்டினால், ஸ்ரீவியாசராஜர் -

அச்யுதாங்க்ரி நிஷ்டர யத்ருச்சா லாப துஷ்டர |
நிஸ்சயாத்ம ஞானவுள்ள அச்ச பாகவதர || நட்பு இருக்கட்டும் என்றார்.

பாகவதரே, பகவந்தனின் ஞானத்தை தெரிவியுங்கள். அவனின் தரிசனத்திற்காக வழி காட்டுங்கள். ஸ்ரீஹரியின் பிரதிபிம்பரானவர் ஸ்ரீமதானந்த தீர்த்தர். பிறகு, அந்த பரம்பரையில் வந்த யதிகள், தாசர்கள்.

ஹரிதாசர சங்கதிந்த
ஹரி நின்ன சங்கவாயிதோ எனகெ
தந்தெ முத்துமோகன விட்டலா || - தந்தெமுத்துமோகனதாசர்

ஹரிதாசரின் நட்பினால் ஆகும் பலனை புரந்தரதாசர் இப்படியாக வர்ணிக்கிறார்.

ஹரி ஷரணரென்ன மனெய மெட்டிலு மனெ பாவன்னவாயிது
ஹரி ஷரணரென்ன கூட மாதனாடலு தனு பாவனவாயிது
ஹரி ஷரணரென்ன மனெகெ பந்தரெ என்ன இப்பத்தொந்து குல பாவன்னவாயிது
ஹரி ஷரணரெனகெ கதி ஹரிஷரணரெனகெ திஷெ
புரந்தரவிட்டலா கதுகின வீர நாராயண ॥ -- ஸ்ரீபுரந்தரதாசர்

தினகளனு களெவ ஜனரே சுஜனரு ।
வனஜனாபன தாசஜன சமாகமதிந்தா ॥ -- ஸ்ரீவாதிராஜர்

**ஜ்யேஷ்ட சுத்த தசமி**

**ஸ்ரீஹரி அனந்தன்**

சாஸ்திரங்கள், ஸ்ரீஹரியை ‘சத்யம் ஞானம் அனந்தம் பிரம்ம’ என்று வர்ணிக்கிறது. விஷ்ணுசஹஸ்ர நாமம் மகாவிஷ்ணுவை அனந்தன் என்று அழைக்கிறது. ஆதி அந்தம் இல்லாதவனே அனந்தன். ஸ்ரீஹரி காலத்தால் தேசத்தால் குணத்தால் அனந்தனாக இருக்கிறான். ஸ்ரீஹரியின் அனந்தத்தை லட்சுமி, பிரம்மா என யாராலும் அறியமுடியாது. இதையே ஸ்ரீபாதராஜர்:

அன்னந்த காலதல்லி நின்ன நானரியதெ பவகளல்லி பந்தேனோ
அன்னந்த காலதலி நின்னவனெனிஸிதெ மூருகனாதேனோ ॥ என்றார்.

இத்தகைய அனந்தரூபியை அறிவதின் பலனை ஸ்ரீவியாசராஜர் --

அனந்த ரூபதொளொந்தே ரூபவ ।
அனந்த நாமதொளெந்தே நாமவ
அனந்த ஜீவரொளகாவனாதரும் ।
கனசலி நெனெதரெ ருணியாகிப்பனய்யா ॥ -- ஸ்ரீவியாசராஜர்

ஸ்ரீகிருஷ்ணன் அர்ஜுனனுக்கு விஸ்வரூபம் காட்டியபோது தன் அனந்த ரூபத்தைப் பற்றி சொல்கிறான்.

தேஜோமயம் விஷ்வமனந்த மாத்யம் ।
யஸ்மின் த்வதன்யேனந த்ருஷ்ய பூர்வம் ॥

ஸ்ரீமதானந்த தீர்த்தர், தமது மங்களாசரணத்தில், அனந்தனை, அனந்தஷக்தன் என்றே வணங்குகிறார். - அனந்தசக்திம் சர்வக்ஞம் நமஸ்தே புருஷோத்தமம் ||

ஸ்ரீபுரந்தரதாசர் அனந்தரூபியான அனந்தனை அர்ஜுனன் பார்த்த வகையில் விவரிக்கிறார்.

அனந்த முகுட அனந்த ஷிரஸ்ஸு அனந்த நயன
அனந்த நாசிக அனந்த கர்ண அனந்த வதன
அனந்த கம்பு அனந்த கந்தர அனந்த ஸ்ரீதேவி
ஸ்ரீகந்த ஸ்ரீவத்ஸ ஸ்ரீதுளசி வைஜயந்தி
மாலெயந்தொப்பிஹன அனந்த |அனந்த
பாஹு முத்ரே அனந்த ஷங்க அனந்த சக்ர
அனந்த வ்ருக்ஷ அனந்த குக்ஷி அனந்த நாபி
அனந்த கடியு அனந்த ஊரு அனந்த ஜானு
அனந்த ஜங்க அனந்த சரண அனந்த பெட்யதிந்தொ
ப்புவ ஹொரெ ஔகிப்பனோ புரன்
தர விட்டலராய நொப்ப அனந்த || -- ஸ்ரீபுரந்தரதாசர்

ஸ்ரீமதாசார்யர் – 'ஈசமனந்த முபாஸ்ய ஹரிம்' என்கிறார். பகவந்தனை சாஸ்திரங்கள் அனந்தன் என்று அழைக்கின்றன. அவனோ யாரின் கற்பனைக்கும் எட்டாமல் அனந்தானாக இருக்கிறான்.

ஸ்ரீவிஜயதாசர் ஒரு சுளாதியில்:

ஞானாவந்தா குணானந்தா |த்யானானந்தா தானானந்தா |
மானானந்தா மௌனானந்தா |அனந்தானந்தானந்தா |
அனந்த வர்ண விஜயவிட்டலா அனந்த என்ன ப்ராணானந்தா ||

இதே நடையில் கோபாலதாசர் அனந்தனைப் பற்றி பாடியது.

ஒந்து ரூப நோடெ அனந்தபூர்ணவின்னு
ஒந்து அவயவவெ பரிபூர்ணவய்யா
ஒந்து ரூபதொளகெ அனந்த ரூபகளு
ஒந்து ரூபதிந்த பேதாபேதனாகிப்பா
சுந்தர மூர்த்தி கோபாலவிட்டலா

ஒந்தொந்தனந்த ரூப அனந்த ஒந்தே ரூப || -- ஸ்ரீகோபாலதாசர்

பிரசன்னவெங்கட தாசர் அனந்தனின் ரூபத்தை இவ்வாறு கூறுகிறார்.

அனந்த கர்மானந்த நித்யானந்த பூர்ண அனந்த |
அனந்த நிகமக்கெ நிலுக சதானந்த ப்ரசன்னவேங்கட தூக ||

ஜகன்னாததாசர், தமது ஹரிகதாம்ருதசாரம் மற்றும் பாடல்களில் அனந்தனின் சிறப்பை வர்ணித்திருக்கிறார்.

ஒந்து ரூபதொள் ஒந்து அவயவதொள் ஒந்து தேசதொள் ஒந்து ரோமத
பொந்தி இப்பவ ஜாண்டானந்தானந்த கோடிகளு ||

ரமாதேவியைப் பற்றி சொல்லும்போது -- 'இந்தனந்தானந்த குணகள ப்ராந்தகாணதே மஹாலகுமி' என்கிறார்.

லட்சுமிதேவிக்கும் பகவந்தனே தேசகாலாதிகளால் அனந்த்யத்தை அளித்திருந்தாலும், குணங்களால் அவள் அனந்தமாக குறைவானவள்.

தேஷத: காலதோऽனந்தா வ்ருத்திஹ்ராஸ விவர்ஜிதா: |
ததைவ குணதோऽனந்தா: சர்வே சர்வேஸ்வரேஸ்வரா: ||

ஸ்ரீஹரியின் அனைத்து ரூபங்களும் அனந்தகுணங்களைக் கொண்டிருக்கின்றன. இந்த ரூபங்களுக்கு குறைவு / நாசம் இல்லை. ஸ்ருதி, ஸ்ம்ருதி, புராண, இதிகாசங்களில் அனந்தரூபி பகவந்தனை ஜகதீஸ்வரம் என்று அழைக்கிறார். இத்தகைய அனந்தனுக்கு அனந்தானந்த வணக்கங்கள்.

நமோஸ்து அனந்தாய சஹஸ்ரமூர்த்தயே
சஹஸ்ர பாதாக்ஷி ஷிரோரு பாஹவே |
சஹஸ்ர நாம்னே புருஷாய சாஸ்வதே
சஹஸ்ர கோடி யுகதாரிணே நம: || -- மகாபாரதம்

ஸ்ரீமதாசார்யர் அனந்தனைப் பற்றி சொல்லும்போது – 'சந்ததம் சிந்தயேனந்தம் அந்த்யகாலே விசேஷத:' என்கிறார்.

**ஜ்யேஷ்ட சுத்த ஏகாதசி**
**இந்த உடல் வீணாகாமல் இருக்கட்டும்**

தான தர்ம மாடலில்ல, தயபுத்தி புட்டலில்ல
ஞானவரிது ஹரிபூஜெ மாடலில்ல
ஞானி சுக்ஞானிகள சன்னிதியல்லிரலில்ல நிர்ஜல
மனதலி ஒந்து தினவிரலில்ல |
ஏகே பந்த்யோ ஜீவவே ஷரீரதொளு வ்யர்த்தவாகி ||1||

சாதனைக்கான உடலைப் பெற்று வந்த ஜீவி இப்படி இருந்தால் அந்தப் பிறவியே வீண் என்கிறார். அரிதான இந்த பிறவி வந்தபோது, செய்யவேண்டிய கடமைகள் என்ன? இருக்கவேண்டிய முறை எது? என்பதை தெரிவிக்கிறார். அப்படி இல்லையெனில், மனிதனாகப் பிறந்து என்ன பலன் எனக் கேட்கிறார்.

சதி புருஷரு நாவு சந்தோஷதிந்திரலில்ல
யதியாகி தீர்த்தயாத்ரே மாடலில்ல
ஸ்ருதி சாஸ்திரபுராணகள கிவிகொட்டு கேளலில்ல
ம்ருதவாகோ கால பந்து பரிதெ முப்பாதெனல்ல ||2||

கடமை தவறியபோது மனிதனுக்கு சுய-இரக்கம் வரவேண்டும். வாழ்க்கையில் சுகம் வேண்டுமெனில், குடும்பத்தினருடன் மகிழ்ச்சியாக இருக்கவேண்டும். யதிகள் ஒரே இடத்தில் இருக்காமல், எப்போதும் பயணத்தில் இருந்து தத்வஞானத்தை பரப்பவேண்டும். ஸ்ரீவாதிராஜர் இந்தியா முழுக்க பயணித்து 'தீர்த்தப்ரபந்த' கிரந்தத்தை இயற்றினார். ஜீவனின் முக்கியக் கடமை - புதிய ஞானத்தைப் பெறுதல்.

உண்டு சுகி அல்ப உட்டுதொட்ட பரிணாம இல்ல
கொண்டு கொட்டு ஹரிசேவே மாடலில்ல
துண்டு நாயியந்தே மனெமனெகள திருகிட்டி
மொண்ட ஜோகிகுணங்கள பிடிஸோ ஹயவதன ||3|| -- ஸ்ரீவாதிராஜர்

பூமியில் இருப்பதால் என்ன பயன்? உலகத்தில் நம்மைக் கொண்டு வந்தவனையே மறந்து, அவன் சேவையை செய்யாமல். தெரு நாய்

எப்படி தெருத்தெருவாக உணவிற்காக சுற்றுகிறதோ அப்படி சுற்றுகிறான் ஜீவன் என்கிறார். என்னிடமிருந்து சேவையை செய்வித்து, சேவையைப் பெற்று, என் மேல் தயை காட்டு என்கிறார். இது ஸ்ரீஹரியிடம் கேட்கும்படியான உரிமையான வேண்டுதல். நம் துர்குணங்களை அவனிடம் சமர்ப்பித்து, பிறவிக்கான நற்பயனை பெறுவதற்காக, அவனின் கருணையைப் பெறுங்கள் என்கிறார். மேலே சொன்னதைவிட வேறு வகை மனிதர் இல்லை. அதற்கே ராஜர், எப்படியோ வாழ்ந்து வீணாகாதீர்கள் என்று எச்சரிக்கிறார்.

**ஜ்யேஷ்ட சுத்த த்வாதசி**

**இந்திரியங்களுக்கு பாடம்**

'சஞ்சலோயம் மனோ மீனோ' - மனம் மீனைப் போல சஞ்சலமானது. இப்படி எல்லா இந்திரியங்களும் தற்காலிக சுகங்களுக்கு பலியாகி புத்தியை மட்டுப்படுத்துகிறது. அதற்கு தாசர், இந்த இந்திரியங்களுக்கு தக்க வேலையைக் கொடுங்கள் என்கிறார்.

எலெ மனவே ஹரித்யானவ மாடோ ||ப||

எலெ ஜிஹ்வே கேளோ கேசவன குணகள பஜிஸோ
எலெ மனவே முரவைரிய நங்க்ரிகள பஜிஸோ
எலெ கரகளிரா ஸ்ரீதரன சேவெய மாடி
எலெ கர்ணங்களிரா அச்யுதன கதே கேளி ||1||
எலெ நேத்ரகளிரா ஸ்ரீகிருஷ்ணமூர்த்திய நோடி
எலெ பாதகளிரா ஹரியாத்ரயனே மாடி
எலெ நாசிகவெ முகுந்தன சரணவர்பர்பிஸித
துளசி பரிமளவன ஆக்ராணிஸி அனுதின ||2||
எலெ ஷிரவே ஸ்ரீ கேளதோக்ஷஜன சிரிரமண
ஜலருஹதொளளியந்தெ பிடதெ ஒல்யாடு
எலெ மனவெ நீனு ஸ்ரீபுரந்தரவிட்டல
சலெ பகுதி ஜனர சங்கதியல்லி பாளு ||3|| -- ஸ்ரீபுரந்தரதாசர்

ஹரிதாச சாகித்யத்தில் தாசர்கள் அனைத்து இந்திரியங்களுக்கும் குறிப்பாக மனதிற்குக் கூறும் அறிவுரை இதுவே. ஸ்ரீஹரி கொடுத்த இந்த சாதன சரீரத்தின் இந்திரியங்களை சரியான வழியில் பயன்படுத்துங்கள் என்று தாசர் வேண்டுகிறார். 'இந்திரியங்கள சுகத நெச்சதிரு கண்ட்யா' என்பதும் இதற்காகவே.

தனு ஷுத்தி இல்லதவகெ தீர்த்தர பலவேனு?
மனஷுத்தி இல்லாதவகெ மந்த்ரத பலவேனு?

என்று உடல் தூய்மை இல்லையெனில், எந்த நல்வழியைத் தேர்ந்தெடுத்தாலும் அது வீணே என்கிறார். ஸ்ரீபாதராஜர் 'என்ன மன விஷயகளல்லி முணுகிதோ என்ன தன்ன விருத்தாப்யவனு இதிதோ ||' என்று ஸ்ரீஹரியிடம் வேண்டிக் கொண்டதை பார்க்கிறோம்.

இந்திரியங்களை கட்டுப்படுத்துவது என்பது சாதனைகளுக்கான வழி. ஆகவே அந்த இந்திரியங்களுக்கு தக்க பாடம் கற்பிப்போம் என்றார்.

**ஜ்யேஷ்ட சுத்த த்ரயோதசி**

**நல்வழிப்படுத்துவாயாக**

நின்ன பாதாரவிந்தத சேவெய மாடி
நின்ன த்யானதலிருவ ஹாகெ மாடு
நின்ன தாசர சங்கதிந்த தூரிடதெனகெ
சன்மார்கதிரிஸோ ஜகதீஷ அகனாஷ || -- ஸ்ரீபுரந்தரதாசர்

வியாஸ-தாஸ மார்க்கத்தில் ஸ்ரீஹரியை நவவித பக்தியில் பூஜித்து அவனை வணங்கவேண்டும் என்று சொல்லியிருப்பதை பார்க்கிறோம். அதற்குப் பலனாக ஸ்ரீஹரியிடம் என்ன கேட்கவேண்டும் என்பதை தாசர் இங்கு பட்டியல் இட்டிருக்கிறார். 'சதா என்ன ஹ்ருதயதல்லி வாச மாடோ ஸ்ரீஹரி' என்று கேட்டு, ஸ்ரீஹரியை எப்போதும் வணங்குமாறு, தியானிக்குமாறு செய் என்று வேண்டுகிறார். காரணம், எக்காலத்திற்கும் எதற்கும் அவன் இல்லாமல் நமக்கு வேறு கதி இல்லை.

நீனே கதி நீனே மதி நீனே ஸ்வாமி ।
நீனில்லதன்யத்ர தெய்வகள நானரியேனு ॥ என்கிறார்.

பகவந்தனைப் பற்றி நமக்கு கற்றுக்கொடுப்பவர் குரு, சாது, சஜ்ஜனர்கள். இத்தகையவர்களின் ஆணை, உபதேசங்கள் இல்லாமல் சரியான ஞானம் உண்டாகாது. வாழ்க்கையை பயனாக்கும் விதம் தெரியாது. ஹரிதாசர்களின் வழிகாட்டுதல் வாழ்க்கைக்கு இன்றியமையாதது. அதற்கே ‘தாசர சங்கதிந்த தூரிடதெ எனகே சலஹய்யா’ என்றார். மறுபடி மறுபடி ‘சங்கவாகலி சாது சங்கவாகலி’ என்று கேட்பதற்கும் இதே காரணம். நல்வழிக்குச் செல்வதற்கும் சாது – சஜ்ஜனர்களின் நட்பு / பழக்கம் தேவை. நமக்குத் தேவையானவற்றையே தாசர் சொல்கின்றனர்.

ஈசனல்லி விக்ஞான பகவ
த்தாசரல்லி சத்பக்தி விஷய நி
ராஸெ மித்யாவாதியலி ப்ரத்வேஷ நித்யதலி ।
ஈ சமஸ்த ப்ராணிகளொளு ர
மேஷனிஹனெந்தரிது அவரபி
லாஷெகள பூரயிசுவுதே மஹயக்ஞ ஹரிபூஜெ ॥ -- ஸ்ரீஜகன்னாததாசர்

எப்போதும் என்னை நல்வழியில் செலுத்து. என்னிடம் சத்காரியங்களை செய்வித்து, அதை ஏற்றுக்கொள். பக்தர்கள் எப்போதும் ஸ்ரீஹரியின் வேண்டுவது இதையே.

**ஜ்யேஷ்ட சுத்த சதுர்தசி**
**ஸ்ரீஸ்ரீபாதராஜர் ஆராதனை**

யத்ப்ருந்தாவன சேவயா சுவிமலாம் வித்யாம் பஷூன் சந்ததிம்
த்யானம் ஞானமனல்ப கீர்த்தினிவஹம் ப்ராப்னோதி ஸ்ரீக்ரம் ஜன: ।
தம் வந்தே நரசிம்மதீர்த்த நிலயம் ஸ்ரீவியாசராட் பூஜிதம் ।
த்யாயந்தம் மனஸா ந்ருசிம்ஹசரணம் ஸ்ரீபாதராஜம் குரும் ॥

ஸ்ரீமதாசார்ய மத்வரின் சித்தாந்தம் மற்றும் ஹரிதாச சாகித்ய பரம்பரைக்கு பிதாமகர் நிலையில் இருப்பவர் ஸ்ரீபாதராஜர். இவரது தலைமை மற்றும் வழிகாட்டுதலில் ஹரிதாச சாகித்யம் வளர்ந்து தற்போதைய பிரம்மாண்ட நிலைக்கு வந்துள்ளது. வியாச & தாச சாகித்யங்களில் திறன் பெற்ற ஸ்ரீபாதராஜர், ஸ்ரீவியாசராஜர் போன்ற மகான்களை தயார் செய்தாலும், கூடவே ரங்கவிட்டலா என்னும் அங்கிதத்துடன் ஹரிதாச சாகித்யத்திற்கு சுழி போட்டதைப் போல, பல பாடல்களை இயற்றி இந்த சாகித்யத்தை சிரஞ்சீவியாக்கியிருக்கிறார். இத்தகைய மகானை நினைத்த மாத்திரத்தில் சுவையான உணவும், வணங்கினால் நன்மையும், இஷ்டார்த்தங்களும், பூஜித்தால் சுக்ஞானமும் கிடைக்கும்.

ஸ்ரீமதானந்த தீர்த்தரின் சாட்சாத் சிஷ்யரான பத்பனாப தீர்த்தரின் பரம்பரையில் வந்த எட்டாவது யதிகளான ஸ்ரீசுவர்ணவர்ண தீர்த்தரின் சிஷ்யர் ஸ்ரீலட்சுமிநாராயணமுனிகள். கிபி 1406 பிறந்த இவர் சுமார் 1412ல் ஸ்ரீரங்கத்தில் சன்யாசம் பெற்றார். ஒருமுறை கொப்பர க்ஷேத்திரத்தில் சுதா பாடம் படிக்கும் சந்தர்ப்பத்தில் அங்கு வந்த அன்றைய உத்தராதி மடாதீசரான ஸ்ரீரகுனாத தீர்த்தரால் புகழப்பட்டு ஸ்ரீபாதராஜர் என்று பெயர் பெற்றார். முளபாகிலில் வித்யாபீடத்தை நிறுவி சன்யாசிகளுக்கு, பல கிருஹஸ்தர்களுக்கு பாட பிரவசனங்களை நிரந்தரமாக நடத்திய புண்யாத்மர். சம்ஸ்கிருதம் மற்றும் கன்னடம் என இரு மொழிகளிலும் சித்தாந்த பிரசாரம் செய்வதை மிகவும் விரும்பினார். சம்ஸ்கிருதத்தில் வாக்வஜ்ர என்னும் மிகச்சிறந்த கிரந்தத்தை இயற்றினார். கன்னடத்தில் பல கீர்த்தனைகள், உகாபோகங்கள், நரசிம்ம தண்டகம், மத்வ நாமா, பிரமர கீதே, வேணுகீதே ஆகிய கிருதிகளை இயற்றினார். விஜய நகரத்தின் சாளுவ நரசிம்மனிடமிருந்து ரத்னாபிஷேகம், ராஜனுக்கு வந்த பிரம்மஹத்யா தோஷத்தை நிவர்த்தி செய்தல், நரசிம்ம தீர்த்தத்தில் பாகீரதியை தருவித்தது - என பல அற்புதங்களை செய்தார். ஸ்ரீஹயக்ரீவதீர்த்தருக்கு பீடத்தைக் கொடுத்து 1504 ஜ்யேஷ்ட சுத்த சதுர்தசி முளபாகிலில் பிருந்தாவனத்தில் பிரவேசித்தார். அன்றிலிருந்து அவரை நம்பி வந்த பக்தர்களுக்கு அருள் பாலித்து வருகிறார்.

ஹரிதாச பரம்பரையே ஸ்ரீபாதராயர் மேல் பற்பல கிருதிகளை இயற்றியிருக்கிறது. இவரது வித்யா சிஷ்யரான ஸ்ரீவியாசராஜர்:

மஹிமே சாலதே இஷ்டே மஹிமே சாலதே ||ப||
அஹிஷயனன ஒலுமெயிந்த மஹியொளெம்ம ஸ்ரீபாதராயர ||அப||

முத்தின கவச மேல்துராயி ரத்ன கெத்தித கர்ண குண்டல |
கஸ்தூரி திலக ஸ்ரீகந்த லேபன விஸ்தாரந்திந்த மெரெது பருவ ||1||

விப்ரகெ பிரம்மஹத்ய தோஷ பரலு க்ஷிபர சங்கோதகதி களெய |
அப்ரபுத்தரு தூஷிஸே கெரெண்ணெ கப்பு வசன ஹஸன மாடித ||2||

ஹரிகெ சமர்ப்பிஸித நானா பரிய சாகங்களனு புன்ஞிஸே |
நரரு நகலு ஸ்ரீச கிருஷ்ணன கருணதிந்த ஹசெய மாடித ||3||

ஸ்ரீபாதராஜரின் அருள் அனைவருக்கும் கண்டிப்பாகத் தேவை என்கிறார் ஸ்ரீவிஜயதாசர்.

இவர பிரசாதவாதரெ வியாஸமுனிராயா
கவிராய புரந்தரதாசரு மிகிலா
தவர கருணவின்னு ஸித்திசுவுது கேளி
நவபகுதி புட்டுவுது வ்யக்தவாகி
தவகதிந்தலி சரமதேஹவெ பருவுது
திவிஜரு ஒலிது சத்கர்ம மாடிசுவரு
கவினுத நம்ம விஜயவிட்டலரேய
திவாராத்ரிகளலி அவர கூடாடுவே ||

**ஜ்யேஷ்ட பௌர்ணமி**

**ஜீவ ஈஷ பேதம்**

ஆசார்ய மத்வர் நிறுவி, நிரூபித்த சத்-சித்தாந்தத்தை கன்னடப்படுத்தி பரப்பிய புகழ் ஹரிதாசர்களுடையது. அதில் ஜீவ-ஈஸ பேதம் மிக முக்கியமான ஒன்றாகும். ஸ்ரீவியாசராஜர் - 'பேதோ ஜீவகணா ஹரேரனுசரா: நீசோச்ச பாவம் கதா:' என்று சுருக்கமாகக் கூறினார். இது அனைத்து ஆகமங்களிலும்

சொல்லப்பட்ட தத்வம் ஆகும். உபநிஷத் வாக்கியத்தின் கருத்தினை தாசரின் பார்வையில் காண்போம்.

த்வாஸுபர்ணா சயுஜா சகாயா சமானம் வ்ருக்ஷம் பரிஷஸ்வாஜாதே ।
தயோரன்ய பிப்பலம் ஸ்வாத்வத் யஸ்ரத்ரன்யோ அபிசாகஷீதி ॥
சமானே வ்ருக்ஷே புருஷோ நிகம்னோSநாஷயா ஷோசதி முஹ்யமான: ।
ஜுஷ்டம் யதா பஷ்யத்யன்யமீஷமஸ்ய மஹிமானமிதி வீதஷோக:

ஒந்து வ்ருக்ஷதலி இரடு பக்ஷிகளு
ஒந்தே கூடினல்லி இருதிஹவு
ஒந்து பக்ஷி பலகளனும்புது
மத்தொந்து பலகளனுண்ணது ரங்கா

ஹலவு கொம்பேகே ஹாரிது ஒந்து
ஹலவு கொம்பேகே ஹாரலரியது
ஹலவனெல்லா ஒந்து பல்லது
ஒந்து ஹலவனெல்ல வனரியது ரங்கா

நூரெண்டு கொம்பேகெ ஹாரிது ஒந்து
ஹாரி மேலக்கெ மீரிது ரங்கா
மீரி நம்ம புரந்தரவிட்டலா
சேரி சுகியாகி நிந்திது ரங்கா -- ஸ்ரீபுரந்தரதாசர்

ஒந்தேஹக்கெ ஹண்ணிந்தைதே மத்தொந்தக்கெ நோடுததப்ப ।
ஹண்ணிந்தக்கெ படவாகைதே தின்னதஹக்கெ கலிதைதண்ண ।
சுள்ளல்ல நீ கேளோ தக்க த்வாசுபர்ணத ஸ்ருதியல்லைதே ।
ஒந்தே குலத ஹக்கல்லண்ண ஒந்தே குலவெந்து திளியலிபேடா ।
திளிதரெ நினகெ கேடாதீது நின்ன யோக்யதெ திளித மேலே ।
புரந்தரவிட்டலா ஸ்தளகொட்டாய்னண்ணா ।
ஜயவதெ ஜயவதெ ஈ மனெதனகெ ॥ -- ஸ்ரீபுரந்தரதாசர்

சித்தாந்தத்தின் இந்த பகுதியை ஹரிதாசர்கள் தங்கள் க்ருதிகளில் சொல்லி, பஞ்சபேதம் உண்மை என்று நிரூபித்தனர்.

**ஜ்யேஷ்ட பகுள ப்ரதமை**

**ஸ்ரீஹரி - உனக்கு நீயே**

அனைத்து வேதங்களும் புகழும் ஸ்ரீஹரிக்கு சமமோ உயர்ந்தவரோ யாருமில்லை. 'மத்த: பரதரம் நான்யத் கிஞ்சிதஸ்தி தனஞ்சய' - 'என்னைவிட மேலானவர் யாருமில்லை' என்பது கிருஷ்ணனின் வாக்கு. 'அஷ்டமோரஸ: அத்யதிஷ்டன் தஷாங்குலம்' என்று வர்ணிக்கப்படுகிறார். தாசரின் பாடலில் இந்த தத்வம் அழகாக விளக்கப்படுகிறது.

ஹரி நீனே சர்வக்ஞ ஸ்வதந்த்ர சர்வாதாரக
ஹரி நீனே சர்வோத்பாதக சர்வேஷ
ஹரி நீனே சர்வஜனக ஹரி நீனே சர்வபாலக
ஹரி நீனே சர்வமாரம ஹரி நீனே சர்வப்ரேரக
ஹரி நீனே சர்வகத ஹரி நீனே சர்வவியாப்த
ஹரி நின்ன கருணதிந்த சிரி ஜகஜ்ஜனனியாகி
ஹரி நின்ன கருணதிந்த பரமேஷ்டி மருதரு குருகளாகிஹவு
ஹரி நின்ன கருணதிந்த கிரிஷேந்த்ரரு பதவி பொந்திதவு
ஹரி நின்ன கருணதிந்த சகலரு ஸ்திதியன்னைதிஹரு
ஹரி குருஜகன்னாதவிட்டலா நினகெ நீனே சமனோ || -- ஸ்ரீகுருஜகன்னாததாசர்

படைத்தல் முதலான செயல்கள், அனைத்து நற்குணங்களும் நிரம்பியவன், தோஷங்கள் அற்றவன், ஸ்வதந்த்ரன், அனைத்து ஜட ஜீவர்களை காப்பவன். ஆகவே ஸ்ரீமதாசார்யர் --

அதோ விஷ்ணோ: சர்வோத்தமத்வ ஏவ |
மஹாதாத்வர்யம் சர்வாகமானாம் || என்றார்.

மேலே பார்த்த உகாபோகத்திற்கு சமமான கோபாலதாசரின் பாடல் ஒன்று.

ஹரி சர்வோத்தம சிரி ஆதனராணி
பரமேஷ்டி மகனு ஹரி மொம்மக ஹரிகெ
உரக மஞ்சவு இன்னு கருட ஏரோரதவு

புருஹூத சுரரெல்ல பரிவாதவு ஹரிகெ || -- ஸ்ரீகோபாலதாசர்

வேதவியாசரின் வாக்கு:
நாஸ்தி நாராயண சமம் ந பூதோ ந பவிஷ்யதி
ஏதேன சத்ய வாக்யேன சர்வார்த்தான் சாதயாம்யஹம் ||

**ஜ்யேஷ்ட பகுள த்விதியை**
**சந்தியாவந்தனம் செய்யும் காலம்**

நட்சத்திர சூஸி கண்ட நரகே உத்தம சந்த்யா
நட்சத்திர ஒந்தெரடு கண்ட நரகே மத்யம சந்த்யா
நட்சத்திர தூர காணத நரகே அதம சந்த்யா
நட்சத்திர பிட்டரெ நாராயண புரந்தரவிட்டல பிடுவ || -- ஸ்ரீபுரந்தரதாசர்

சந்தியாவந்தனம் செய்வதற்கு எது சிறந்த காலம் என்கிறார். உபநயனம் ஆனவருக்கு சந்தியாவந்தனம் கட்டாயம் என்கிறார்.

காலகாலத சந்தியாவந்தனே அல்பவெந்து
நிராகரிஸி ஸ்ருதிஸ்ம்ருதி சாருதிதெ
சகல ப்ரயாஸவு பாடலு பஞ்சேகே
மக்களாகோதேனோ மூட கேளோ
பகத்வம்ஸி லட்சுமிகாந்த விட்டலா மெச்சுவனேனோ || -- ஸ்ரீலட்சுமிகாந்த தாசர்

மூன்று வேளையும் சந்தியாவந்தனத்தை எப்போது செய்யவேண்டும்?

நட்சத்திர காணத ப்ராத: சந்த்யா அதம
நட்சத்திர பதியனுஜ கிருஷ்ணசக்ரவ பிடித
நட்சத்திர கண்டரெ நிஷதி அதம
ஈக்ஷிஸி மத்யான்ஹதி சந்தாவந்தனெ கையெ
அக்ஷயானந்த ஸ்ரீநாராயணவிட்டலா
மோக்ஷவ கொடுவனு ஈபரிசரிசலு || -- ஸ்ரீநாராயணவிட்டலர்

சந்தியாவனத்தில் காயத்ரி ஜபம் செய்யும் முறை.

உதயகாலத ஜப நாபிகெ சரியாகி
ஹ்ருதயக்கெ சரியாகி மத்யான்ஹதி
வதனக்கெ சமகாகி சாயங்கால நித்ய
பதுமனாப தந்தே புரந்தரவிட்டலகெ
இதே காயத்ரியிந்த ஜபிசபேகு || -- ஸ்ரீபுரந்தரதாசர்

அனாதி காலத்திலிருந்து வந்த இந்த த்ரிகால சந்தியாவந்தனம் ஒரு சிறப்பான மந்திர-தந்திரம். இதில் அனைத்தும் அடக்கம். நியதிக்கு உட்பட்டது. ரிஷிமுனிவர்களால் பின்பற்றப்பட்டது. வேதங்களில் சொல்லப்பட்ட இந்த சந்தியாவந்தனம், தகுந்தவர்களுக்கு கட்டாயம்.

**ஜ்யேஷ்ட பகுள த்ருதியை**

**என்றும் பயம் இல்லை**

பயம் இல்லாத மனிதரில்லை. பிறந்ததிலிருந்து இறக்கும்வரை அனைத்திலும் பயமே. 'அபய' நாமகன் ஒருவனே இதற்கு தீர்வு/வழி. அனைத்து இடங்களிலும் ஸ்ரீஹரியை நினைப்பவர்களுக்கு என்றும் பயம் இல்லை என்று சொல்லி விளக்குகிறார் ஸ்ரீஜகன்னாததாசர்.

ஸ்னான ஜப தேவதார்ச்சனே வைஷ்வதேவ பலி
தான பாத்ராபாத்ர விதி நிஷேதகளு வி
க்ஞான விஹதாசரணெ சர்வத்ர நியம சுஹஸன வைராக்ய சக்தி |
ஸ்ரீனிவாசன பரம விமல லோகைக க
ல்யாண குணரூப க்ரியகளனு ஜட சேதனதி
தேனிஸுவ மனதி ஹிக்குத துதிஸி நலிவ சம
ஹானு பாவக்ஞரிகெ ஈரேளு லோகதலி
பவபயவில்லா பராவரேஷன சகல
டாவினலி சிந்திசுவ பாவக்ஞ ஜனரிகெ || -- ஸ்ரீஜகன்னாததாசர்

பயம் / துக்கம் நீங்கி, சுகம் பெறுவதற்கு மனிதன் என்ன செய்யவேண்டுமென்று ஜகன்னாததாசர் ஒரு பட்டியல் கொடுக்கிறார். தகுதிக்கேற்ப இவற்றைச் செய்து, தூய்மையான

சிந்தனையுடன் நடக்க வேண்டிய, விதிகளுக்கேற்ப சொல்லப்பட்ட பட்டியல் இது.

விதி பூர்வகமான ஸ்னானம், சந்தியா, மந்திரோபதேசம் பெற்ற ஜபம், தந்த்ரசாரத்தில் சொல்லப்பட்ட தேவதார்ச்சனை, பஞ்சமஹாயக்ஞங்கள், பகவந்தனைப் பற்றிய விசேஷ ஞானம், பாடம் படித்தல் / சொல்லுதல், டாம்பீகம் இல்லாத சாஸ்த்ரோக்தமான செயல்கள், கர்வம் பொறாமை இல்லாமல் இவற்றை பின்பற்ற வேண்டும். காம, குரோதங்கள் இல்லாமல் ஒரு மனதுடன், வைராக்யத்துடன் இருக்கவேண்டும். அனந்தகல்யாண குணபரிபூர்ண தோஷங்கள் அற்ற ஸ்ரீஹரியை நினைத்தவாறு - ஜட சேதன உலகத்தை அனாயாசமாக படைப்பவன் என்று நினைத்து - அனாதபந்துவான ஸ்ரீஹரி அனைவரின் காப்பாளன் என்று நினைத்து, பிரம்மன் முதலான அனைவராலும் வணங்கப்படுபவன் என்று நினைத்தால் - என்றும் யாருக்கும் பயப்படும் அவசியம் இல்லையென்று விளக்குகிறார்.

அவனு ஒலிதரெ இன்னேதர பய. அவனு ஒலிதரெ இன்னேதர சிந்தே ||

## ஜ்யேஷ்ட பகுள சதுர்த்தி இருந்தும் இல்லாதது

விஜயதாசர் தமது சுளாதிகளில் தத்வவிஷயங்களை மிகவும் அற்புதமாக விளக்கியுள்ளார். வாழ்க்கையில் பிறந்து, ஓடியாடி வாழும் ஜீவன் எப்படி இருக்கவேண்டும், எப்படி வாழ்க்கையை வாழ்ந்து தம் இலக்கை / சத்கதியை அடையவேண்டும் என்று அவர் தெரிவிக்கும் விதத்தைப் பார்ப்போம்.

இரபேகு சம்சாரதொளில்லாதிர பேகு |
அங்கணதொளு ஹக்கெ குளிது ஹாரிதந்தெ
அங்கடிய நெரஹி திருகி ஜன போதந்தெ
முங்குடி மக்களு மனெகட்ட கெடெஸிதந்தெ
ஹிங்கதர வண்டகெய மந்தி ஸாகிதந்தெ
சங்காதவரு தன்ன கூடலித்தரு அவர
ஹங்கிகனாகதெ அதரந்தெ குணிசோது

முகாரி மிஞ்சினந்ததி தேஷதொளகெ நி
ஸ்ஸங்கனாகி திருகி கால களியபேகு
பங்கார மொதலாத த்ரவ்யகள கண்டரெ
முங்காலலி ஒலிது தாடி போகுவதய்யா
ஹங்கிக நாகதிரு பரர வஷக்கெ ஸில்கி
பங்கவாதரு லேஷ கேதபடதிரு
மங்கள மூருதி விஜயவிட்டலரேயன
சங்கீததலி பாளி ஹரிதாசர பாதக்கெ பீளோ || -- ஸ்ரீவிஜயதாசர்

ஸ்ரீவிஜயதாசரின் குருவான புரந்தரரின் சொல் - 'தர்மவே ஜயவெம்ப திவ்ய மந்த்ர | மர்மவன்னரிது மாடலுபேகு தந்த்ர ||'. வாழ்க்கையை எப்படி இருந்து வெல்லவேண்டும் என்று உதாரணங்களின் மூலம் தாசர் விளக்கியிருக்கிறார். சுக துக்கம் என அனைத்திலும் சலனப்படாமல், வைராக்கியம் பெற்று இருப்பதே ரகசியம் என்கிறார். நீரில் தாமரை இருப்பதைப் போல. வர்ணாஸ்ரமத்தின் கடமைகளை தவறாமல் செய்யவேண்டும்.

கமலதொளு கமல இத்தந்தெ இது ஹ்ரு
த்கமலதல்லி விஜய விட்டலனு பூஜிபுது || -- ஸ்ரீவிஜயதாசர்

**ஜ்யேஷ்ட பகுள பஞ்சமி**

**சிரிப்பு வருகிறது**

ஸ்ரீபுரந்தரதாசரின் அனுபவ வாக்கியங்கள். கடுமையான வார்த்தையானாலும் உண்மையானவை. தான் பார்த்ததையே அவர் கூறுகிறார். மக்களின் போலி வாழ்க்கையை விமர்சிக்கும் வார்த்தைகள்.

நகெயு பருதிதே எனகெ நகெயு பருதிதே |
ஜகதொளிருவ ஜாணரெல்ல ஹகரண மாடுவுதனெ கண்டு ||

சாதாரணமாக நாட்டில் மக்கள் ஏதாவது ஒரு பகட்டு / வெளிவேஷத்தில் மூழ்கியிருப்பார்கள். அதிகம் படித்தவன் என்றால் அதிகம் பகட்டு. தோற்றம், பேச்சு, நடவடிக்கைகளில் மற்றவரை மயக்குவது என செய்வர். தாசர் ஒரு இடத்தில்

‘ஹாகுவுது சாது வேஷ, சாகுவுது ஹலவு தோஷ’ என்பதுபோல, இந்த வெளிவேஷத்தினைக் கண்ட தாசர் சிரிப்பு வருகிறது என்கிறார். இதற்கு இன்னொரு இடத்தில்:

ஹீன குணவ மனதொளிட்டு தானு விஷத புஞ்சனாகி
மௌனி புரந்தரவிட்டலன்ன த்யான மாடுவவன கண்டு ॥ நகெயு பருதிதே

மனதில் துஷ்ட சிந்தனைகள்; விஷ எண்ணங்களை வைத்துக்கொண்டு வெளியில் அதாவது நடவடிக்கைகளில் நல்லவர்களைப் போல இருக்கும் மக்கள் பலர் என்கிறார். இதையே டாம்பீகம் என்கிறார். இதை சில பண்டிதர்களிலும் காணமுடியும். இதையே ‘ஆத்ம-வஞ்சனை’ எனலாம். இது என்றும் சரியல்ல. இந்த வாழ்க்கை தற்காலிகம். ஆகவே எதையாவது செய்து நற்கதியை அடைவோம் என்கிறார்.

’நீர மேலின குள்ளிகெ சரி ஈ சரீர । ஸ்திரவெந்து நம்பதிரோ ॥’ என்கிறார். தாசர் தம் முழு வாழ்க்கையையும் சமூகத்தை திருத்தி, இங்குள்ள குற்றம் குறைகளை சரிப்படுத்துவதில் தன் நேரத்தை செலவழித்தார். அவரின் இன்னொரு பாடல்:

’துதி நாலிகெ பெல்ல இதே கத்தரியவர சங்க பேட’
’ஒள்ளே ஜனகள நிந்தெயனௌ மாடபேட । ஒள்ளெயவனெந்தரெ ஹிக்கபேட ।’ என்பதை நம் மனதில் வைக்கவேண்டும்.

இப்படியாக டாம்பீக ஆடம்பரத்தை துறந்து, அந்தரங்கத்தை சுத்தமாக்கி வாழ்க்கையை வாழ்வதற்கு அறிவுரை சொல்கிறார். ஞானிகளின் முன்னர் அவர்களது சிரிப்பிற்கு ஆளாகாதீர்கள் என்றார். இறுதியாக தாசரின் இன்னொரு பாடல்:
’சித்ததலி சரண நம்பித ஜனரிகெ
நித்யாயு உத்ஸாஹ விஜயவிட்டலனீவ’ ॥ -- ஸ்ரீவிஜயதாசர்

**ஜ்யேஷ்ட பகுள சஷ்டி**

**தோஷம் என்றால் என்ன?**

பொதுவாக மக்கள் தங்களை தோஷங்கள் அற்றவர் என்றும், அடுத்தவரை பழிப்பவர்களே தோஷம் உடையவர் என்றும்

சொல்வதுண்டு. சரி தவறு என்பதைவிட, மனிதனின் நிலையே அது குற்றமா இல்லையா என்பதை தீர்மானிக்கிறது. ஆனால் கோபாலதாசர் தனது திடமான வார்த்தைகளால் எது தோஷம் என்பதை தெளிவாகச் சொல்கிறார்.

எனகிந்து உத்தமரில்லா எம்போதொந்து தோஷ
எனகிந்த நீச தொட்டவன் எம்போதொந்து தோஷ
தனகிந்ததிகன்னு சமானவெம்போது தோஷ
தன்னிந்த பின்னவஸ்து தன்னதெம்போது தோஷ
தனகே தானரிய அன்ய பல்லேனெம்போது தோஷ
தனகே தா துதிஸிகொண்டு தன்யனெம்போது தோஷ
தனகே சக்தி இத்து கர்ம பிட்டு கொடுவுதே தோஷ
தனகில்லத கர்த்ருத்வ தானு எம்போது தோஷ
இனிது தோஷங்களில்ல எணிஸிதடாயிதின்னு
தனகே ஈஷகெ ஐக்ய பேளுவதகிந்த தோஷ
கனகாதி ஒடெய கோபாலவிட்டலன
நெனெஸதலித்ததகெ தொட்ட தோஷ || -- ஸ்ரீகோபாலதாசர்

எப்படியோ வாழ்ந்துவிடலாம் என்று இருக்கக்கூடாது. காரணம் தோஷங்கள் எவை என்று அறியவேண்டும். அது அறியாவிட்டால் துக்கமே. மனிதனிடமிருக்கும் கோபம், கர்வம் ஆகியவை உண்மையை மறைக்கின்றன. இங்கு தாசர் உண்மையை சொல்வதற்கு, யதார்த்தமான விஷயங்களை பேசுகிறார். உண்மையில் அனைவரும் தோஷிகளே என்கிறார். விஷயங்களை சொல்லிவிட்டு, இப்போதாவது விழித்துக் கொள்ளுங்கள் என்கிறார்.

அவர் சொல்லும் விஷயங்களை பின்பற்றி தோஷமற்று இருக்க முயலவேண்டும். அப்போதே நாம் மற்றும் நமது சமூகம் முன்னேற முடியும். தாசரின் வாக்கியங்களை தினமும் படித்தால், கொஞ்சமாவது இது தோஷம் என்று அறிந்து நாம் திருந்த வாய்ப்பு உண்டு. அனைத்தையும்விட பெரிய தோஷம் என்னவென்றால், தோஷங்கள் அற்ற இறைவனை மறந்தது. அவனது மகிமைகளை அறியாதது. ஆகவே கோபாலதாசர் 'கோபாலவிட்டலன நெனெஸதலி இத்தக்கே தொட்ட தோஷ' என்கிறார்.

முதலில் நம்மில் இருக்கும் தோஷங்களை காணவேண்டும். பிறகு 'ஆதத்தெல்லா ஒளிதே ஆயித்து, இன்னாதரு ஒள்ளெ ஹாதி ஹிடியோ பிராணி' என்று புரந்தரதாசர் சொன்னதுபோல, முன்னோர்களின் வழியை பின்பற்ற வேண்டும்.

**ஜ்யேஷ்ட பகுள சப்தமி**

**ஆனது ஆயிற்று. அடுத்து?**

ஹிந்தின காலவ வ்யர்த்தவாகி களெவனோ |
முந்தின கதி சிந்தே லேஷவில்லவோ |
முந்தவாதது இந்திரிய கதிகளெல்லா || --ஸ்ரீவியாசராஜர்

நேரம் யாரைப் பற்றியும் கவலைப்படுவதில்லை. யார் பேச்சும் கேட்பதில்லை. என்ன ஆயிற்று என்று யோசிப்பதற்குள் நேரம் போய்விடுகிறது. நம் இறுதிக்காலம் அருகில் வந்துவிடுகிறது. இது அனைவரின் அனுபவமே. போன காலம் மறுபடி வராது என்று அனைவரும் அறிவர். இதற்கே ராஜர் கூறினார் - ஆனது ஆயிற்று. இனி வரும் காலத்தை பார்ப்போம்.

'ஹோகுத்திதோ ஏனோ ஹொத்து, கூகுத்திதே ஏனோ ம்ருத்யு'. கோபாலதாசரின் இந்தப் பேச்சைக் கேட்டால் பயம் வருகிறது. ஆனால் இதுவே உண்மை. புரந்தரதாசரின் பேச்சையும் கேட்போம். 'தாளி ஹோகுவ முன்ன தர்மத பளிஸிரோ' என்கிறார். நினைவில் வைப்போம். மறுபடி இவரே 'மானவ ஜன்ம தொட்டது, இத ஹானி மாடலுபேடி ஹுச்சப்பகளிரா' என்கிறார். இதற்கு பின்புலமாக ராஜர் பாடிய பாடல் 'ஆததாயிது இன்னாதரு ஒள்ளே ஹாதி ஹிடியோ பிராணி'. அடுத்து நடக்கப் போவதை யோசிப்போம். வாழ்க்கையை திட்டமிடுவோம்.

ஒவ்வொரு நாளும் நம் தேகம், வாகனங்களைப் போல் தேய்ந்து போகின்றது. இதற்கு தீர்வே இல்லை. வாகனங்களின் பாகங்களை சுலபமாக மாற்றலாம். ஆனால் தேகத்திற்கு அப்படி இல்லை. உறுப்புகள் ஓய்ந்துபோகும் முன், ஹரிதாசர்கள் நமக்காக திரும்பத்திரும்பச் சொன்னதை ஒருமுறையாவது கேட்போம். அதை பின்பற்ற முயன்றால், இப்பிறவிக்கு அதுவே பயன்.

அய்யோ. இப்படி ஆகிவிட்டதே என்று வருத்தப்படாமல், இப்படி நடந்தால், இப்படி செய்தால் ஸ்ரீஹரி நம்மைப் பார்ப்பான் என்று ஹரிதாசர் கூறிய வழிமுறைகளை அறிந்து பின்பற்றுவோம். பயனடைவோம்.

சிலசமயம் இப்படியும் தோன்றும் என்கின்றனர் தாசர்கள்.

ஹரிகொட்ட காலக்கே உணலில்லா |
ஹரி கொடத காலக்கே பாய்யிடுவே பிராணி || -- ஸ்ரீபுரந்தரதாசர்

ஆகவே ஸ்ரீஹரி அந்தந்த காலத்திற்கு சரியான புத்தியைக் கொடுத்து அருளட்டும் என்று வேண்டுவோம்.

**ஜ்யேஷ்ட பகுள அஷ்டமி**

**நானல்ல, நீயே கடவுள்**

நானு நன்னது அந்து நானு நன்னது இந்து
நானு நன்னது தந்து நானு நன்னது ஒந்து
நானு நன்னது வஸ்த்ர நானெம்புது பிடதெ
நானிந்தலி கெச்சி நானெம்புது பிடிஸோ
நீனே விஜயவிட்டலரேயா || --ஸ்ரீவிஜயதாசர்

எனது என்று எதுவுமே இல்லை, நான் நினைப்பது என்றுமே நடப்பதில்லை - என்பதே மனிதனாகப் பிறந்து வந்த அனைவருக்கும் தெரிந்த விஷயம். ஆனால் நாம் நடப்பது வேறு வழியில். ஸ்ரீமதாசார்யர் நமக்காகவே சொன்னது - 'நா அஹம் கர்த்தா; ஹரி: கர்த்தா'. ஆனால் நாம் இதை நினைப்பதில்லை.

தினமும் வாழ்க்கையில் - நான், எனது, என்னாலேயே அனைத்தும் நடக்கிறது என்று சொல்பவர்களே அதிகம். விதிப்படி, சாஸ்திரங்களில் சொல்லியவாறு வர்ணாசிரமங்களுக்கு ஏற்ப நடந்தால் மட்டுமே, ஸ்ரீஹரி காட்சியளிப்பான். அதற்கே ஸ்ரீவியாசராஜர் 'ஆளிதே நீனு நீனாளு நானு' என்று உபதேசிக்கிறார்.

நானே நானே எந்து பேளுவ மனுஜனு
நானா யதனகள படுவனு அனுதின
தீன மந்தார சிரிவிஜயவிட்டலரேய
நீனே மாள்பெனெந்து பக்தர கைபிட || -- ஸ்ரீவிஜயதாசர்

விஜயதாசர் இவ்வளவு தெளிவாக சொல்லியிருப்பதை பின்பற்றினால் அனைவரின் வாழ்க்கையும் சுகமயம். மனிதனுக்கு இருக்கும் தேக-அபிமானத்துடன் நான், எனது என்னும் எண்ணத்திலிருந்து வெளிவரவேண்டும். 'நன்னதேனிதே, எல்லவு நின்னதே தேவ' என்னும் அனுபவப் பேச்சு, நம் இதயத்தின் பேச்சானால் அனைத்தும் சரியாகிவிடும்.

**ஜ்யேஷ்ட பகுள நவமி**
**எனது தேகமும் உனக்காகவே**

சிர நின்ன சரணக்கெ எகருவந்தெ மாடோ
கர நின்ன பூஜெ விஸ்தரவாகி மாடலின்னா
சரிஸலு பாதகளு புண்யதேஷகளல்லி
ஹரினின்ன நாம உச்சரிசலு அனனவு
வரனாசிக கர்ணசிரி அரஸினெ நின்ன
வரகதெ நிர்மால்யகளு சவியலி அனுதின
பரம புருஷ மிக்க இருவ இந்திரியகளெல்ல
சரியதெ நின்ன சேவெயனு பொந்திரலய்ய
சரசிஜ தளனயன வேணுகோபாலவிட்டல
இருளு ஹகலு நின்னுச்சரிசுவந்தெ மாடோ || -- ஸ்ரீவேணுகோபாலவிட்டலா

ஸ்ரீஹரி கருணையுடன் அளித்த இந்த தேகம் அவனுடையதே. அவனுக்காகவே இந்த உடல் பயன்பட வேண்டும். இந்த உடல் வருவதற்கும், இருப்பதற்கும், அழிவதற்கும் என அனைத்திற்கும் ஸ்ரீஹரியே காரணம். அதற்காகவே 'தேனத்யக்தேன புஞ்சீதா:' என்றார். தேகத்தில் இருக்கும் அனைத்து இந்திரியங்களும் ஸ்ரீஹரிக்காகவே என்று ஸ்ரீஸ்ரீபாதராஜர் கூறுகிறார்.

ஷிர நின்ன சரணக்கெரகலி சக்ஷு
எரகதிந்தலி நின்ன நோடலி ஹரியே
கரண கீதங்கள கேளலி நாஸிக
நிருமால்யனுதின க்ராணிசலி ஹரியே ।
நாலிகெ நின்ன கொண்டாடலி என்ன
தோளு கரங்கள முகியலி ஹரியே
சித்த நின்னொளு முளுகாடலி நின்ன
பக்தஜனர சங்க தொரகலி ஹரியே
வ்ருத்தி தத்வ யோகாப்யாசக்காகலி ரங்க
விட்டல நின்ன தயவாகலி ஹரியே ॥ --ஸ்ரீஸ்ரீபாதராஜர்

இதுவே ஆத்ம நிவேதனம் ஆகும். முதலில் நம் இந்திரியங்களினால் ஆகும் தோஷங்களை அறிந்து, அந்த இந்திரியங்கள் நற்பலனைப் பெறுவதற்கு, தாசர்கள் பாடல்களை அறிந்து பயன்பெறுவோமாக.

**ஜ்யேஷ்ட பகுள தசமி**

**கடன் தீர்த்தல்**

கடனைப் பற்றி பல பாடல்கள் பாடி, ஹரிதாசர்கள் சஜ்ஜனர்களின் வாழ்க்கைக்கு அர்த்தம் கொடுத்தனர். பிறப்பிலிருந்து இறப்புவரை அனைவரும் ஏதோ ஒரு கடனில் இருந்தே தீர்கிறோம். ஜீவர்களுக்கு மூன்று கடன்கள் உண்டு. ரிஷி ருண, தேவ ருண மற்றும் பித்ரு ருண. இவற்றை எவ்வளவு முடியுமோ அவ்வளவுக்கு தீர்க்கவேண்டும் என்கின்றனர். விஜயதாசர் சொல்வது இது.

ரிஷிகள ருண பூர்வாஸ்ரமதிந்த பரிஹார
த்ரிதஷர ருண மேதாதிகளு மாடே,
அனுசம்பந்திகள ருண க்ருஹஸ்தாஸ்ரமதல்லி
புஸியல்லி தித்தி ஹோகுவுது சித்த
வசுதெயொளகெ ஒந்து காசுகொட்டவன ருண
வசுதெயெல்லா திருகி போகதய்யா
பசுபால அவ்யயாத்ம விஜயவிட்டலரங்க
பசுரொளு பொகலிட்டு பேசசதெ பிடதய்யா ॥ -- ஸ்ரீவிஜயதாசர்

* ரிஷி ருண - ஞானத்தை சரியாகப் படுத்துதல்; அடுத்தவருக்கு சொல்லிக் கொடுத்தல் இவற்றால் தீரும்.
* தேவ ருண - யக்ஞ, யாகாதிகள் செய்து தேவதைகளை பூஜித்தால் தீரும்.
* பித்ரு ருண - வம்சவிருத்தி, கிருஹஸ்த தர்மத்தை செய்தல், பெற்றோரை கவனித்தல் மற்றும் அவர்களின் இறுதிச்சடங்குகள் செய்வதால் தீரும்.

இந்த கடன்கள் அல்லாமல், வாழ்க்கையில் சேர்த்துக் கொண்ட கடன்கள் பல உள்ளன. தேகத்தைக் கொடுத்த மாத்ரு ருண, கல்வியைக் கற்றுத்தந்த குரு ருண, சமூகத்து ருண, உதவி செய்தவர் ருண என பலவித கடன்கள் உள்ளன. உடலால், சேவை, பிரதி உபகாரம், உதவி - என செய்து இந்த ருணங்களிலிருந்து விடுபடவேண்டும்.

வாழ்க்கையின் சாரம் என்பதுபோல ஸ்ரீவியாசராஜர் சொன்னது:

ஜனன மரண மார்கதல்லி தொளலி ஒளலி ஸ்வர்க
நரகக்கேரி மமதெயெம்ப பாரவ பொத்து
பளலி தாபத்ரய தாபதிம் பெந்தனெகெ
நக சந்த்ரிக கங்கா சேஷகரதிந்த தம்பாத
சிரிகிருஷ்ணன சரண நெளலு நெலெமனெயாயிது || -- ஸ்ரீவியாசராஜர்

யக்ஞ யாகாதிகள், கற்றல், கற்பித்தல், தானம் கொடுத்தல், பெறல் - இந்த ஆறு செயல்களால் பாகவத தர்மத்தைப் பின்பற்றினால் ருண விமோசனம் ஆகும் என்கின்றனர்.

**ஜ்யேஷ்ட பகுள ஏகாதசி**
**எதையும் எதிர்பார்க்காத ஸ்ரீஹரி**

ஸ்ரீகோபாலதாசரின் மூன்று தம்பிகளும், அண்ணனை வணங்கி அவரிடமிருந்தே தீக்ஷை ஸ்வீகரித்து, அதே தாச விருத்தியை வளர்த்தனர். இது உலகத்திற்கு ஒரு வழிகாட்டும் வரலாறு ஆகும். இம்மூவரும் கிருதிகளை இயற்றியது இன்னொரு விசேஷம். மூவரில் மூத்தவரே குருகோபாலதாசர். அவரது ஒரு உகாபோகம்.

கஜராஜன பொரெதுதேனு கனவு
கஜபுரத த்ரௌபதிய பொரதுதேனு கனவு
பஜகப்ரஹ்லாதனு பொரெதேனு ஆஸ்சர்ய
அஜமிளன பொரதத்து பொரெதெ நின்னவரு
பஜனெ மாடிதுதக்கெ நீ பொரெதெ ஸரிஸாடி
அஜனய்ய நா நின்னவனெந்து ஒம்மெயாதரு சரி
பஜஸிதவ நானல்ல நீ என்ன பொரெதரெ
மஜபாவுரெ கீர்த்தி த்ரிஜகதொளகெ
வ்ருஜின ஹரி ஸ்ரீகுருகோபாலவிட்டல
சுஜனரித கண்டு சந்தோஷிசுவரோ || -- ஸ்ரீகுருகோபாலதாசர்

தன்னை எப்போதும் உபாசிப்பவர்களை ஸ்ரீஹரி காப்பான் என்று தாசர் பல உதாரணங்களை சொல்லியிருக்கிறார். இத்தகைய ஆபத்பாந்தவனான ஸ்ரீஹரி என்னைக் காப்பாற்றாமல் இருப்பானோ? என்று கேட்கிறார். தனது வேண்டுகோள்களை ஸ்ரீஹரியின் முன் வைத்துக் கேட்கிறார். இன்று அனைவரின் நிலையும் இதுவே. அபாரமஹிமனான, பக்தவத்ஸலனான ஸ்ரீஹரி தன் பக்தர்களிடமிருந்து எதையும் கேட்பதில்லை. 'ஸ்மரிசுவரபராதகள தா ஸ்மரிஸ சகலேஷ்ட ப்ரதாயக' என்று ஜகன்னாததாசர், அவனை பக்தியுடன் நினைத்தால் போதும் என்கிறார். இத்தகைய பரமாத்மனை 'சம்ஸ்துதிகெ வஷனாகுவனிவன காருண்யகேனெம்பே' என்று வர்ணித்து, அவனை பக்தியுடன் ஸ்தோத்திரம் செய்தால் காட்சியளிப்பான் என்கிறார்.

ஈ வித்ய அதிகௌப்ய இது அரிது பஜிசுவவ
கோவிதர சர்வ புருஷார்த்தகளனு
தேவ குருகோபாலவிட்டல ஒலிதீவ
காவனு சர்வத்ர தானு பிடதே || -- ஸ்ரீகுருகோபாலவிட்டலதாசர்

எந்த காலத்திலும் யாரிடமும் எதையும் வேண்டாமல், அனைத்தையும் கொடுத்து பிறகு இறுதியில் மோட்சத்தையும் கொடுத்து உதவுபவனே - அனிமித்த உபகாரி - எதையும் எதிர்பாராமல் உதவுபவன்.

‘பேடிதரெ என்னொடெயவன பேடுவே’ என்று புரந்தரதாசர் கூறியது உண்மையான பேச்சு. வேண்டத் தகாதவற்றை தாசர் வேண்டுவதில்லை. அதற்கொரு உதாரணம்.

நின்னல்லி தடவில்லதெ பகுதி கொட்டு
அன்ய ஸ்ரவண கேளதந்தெ கிவிகொட்டு
நின்ன மூருதி முன்ன மனதலி நிட்டு
நின்ன நாமவ என்ன நாலிகெயொளிட்டு
நின்ன பேடிதுதெல்ல நில்லதலெ கொட்டு
என்ன ரக்ஷிஸு வரதகோபாலவிட்டல
நின்ன நா பேடுவுதகேனு மரளெ
நின்னவர தாசனலி தயாமாடு ப்ரபுவே || -- ஸ்ரீவரதகோபாலவிட்டலதாசர்

தமது தேகத்தில் எல்லா இடங்களிலும் ஸ்ரீஹரி இருக்கவேண்டுமென்று, அந்தந்த உறுப்புகளின் வேலையை அவனுக்கு சமர்ப்பிக்குமாறு வேண்டினார். இன்னொரு கிருதியில் தமக்கும் ஸ்ரீஹரிக்கும் இருக்கும் வித்தியாசத்தைக் கூறி, உன்னையே சரணடைகிறேன் என்கிறார்.

ஹிதரொளகெ நின்னந்த ஹிதகரரு எனகில்லா
மதிஹீனரொளகெ சரி எனகில்லவோ
பதிதபாவன நீனு பதிதமனுஜனு நானு
ச்யுதிதூர வரதகோபாலவிட்டலரேய
அதிதயாபர நின்ன க்ருபெகெ எணெகாணே || -- ஸ்ரீவரதகோபாலவிட்டலதாசர்

ஆகையால் ஸ்ரீஹரி என்மேல் கருணை காட்டி, காப்பாற்ற வேண்டும் என்கிறார்.

மூடதாசனு நானு காடனல்லவோ நின்ன
பேடி காடிஹெனு
ஒடதலெ நிம்மய பேடண பந்தேனோ ||

ஏனென்றால் நீ என்னிடம் எதையும் வேண்டாமல் அனைத்தையும் கொடுக்கும் அனிமித்த உபகாரி.

## ஜ்யேஷ்ட பகுள த்வாதசி

## வைஷ்ணவ தீக்ஷை

ஹரிதாசர் கிருதிகளில் த்வைத சித்தாந்தத்தின் கருத்துகள், ஸ்ரீஹரியின் மகிமைகள், வாயுதேவரின் ஜீவோத்தமத்வம், ஈஷ-தாச பாவம் ஆகிய பல தத்வங்கள் அடங்கியிருக்கின்றன. இவை அனைத்தும் வைஷ்ணவ தீக்ஷையை ஆதரிக்கும் கருத்துகளாகும். அனைத்திற்கும் முக்கியமானது பகவந்தனில் திடமான விஸ்வாசம், பக்தி. இதையே 'ரக்ஷதீத்யேவ விஷ்வாஸ:' என்று ஸ்ரீமதாசார்யர் கூறுகிறார். 'தீக்ஷாஸ்யாத்புத சங்க்ரஹ:' வாழ்க்கையில் விரதத்தை அனுசரித்தலை தீக்ஷை என்கின்றனர்.

ஸ்ரீபுரந்தரதாசர் சபதம் செய்து சொல்வது இதையே:

ஹரியே சர்வோத்தம ஹரியே பரதேவதெ
ஹரி சர்வவிஷ்வமயம் ஜகது
ஹரியில்லதன்யத்ர தெய்வங்களில்லாவெந்து
உரகன ஹெடெயன்னு பிடிது பேளுவேனய்யா || என்றார்.

இன்னொரு இடத்தில்:
விதாத்ரு தேவதெகளெல்லா விஷ்ணுவின ஹிந்தே |
இதக்கே நா பணிபண கையாகெ ஹிடிதெ ||

ஸ்ரீவியாசராஜரின் தீக்ஷை இப்படியாக இருக்கிறது:
உக்குவ துப்பக்கெ கையிக்குவே நானு |
சக்ரதர பரமாத்ம னொப்பனல்லதில்ல வெந்து ||

தீக்ஷை பற்றி ஸ்ரீபுரந்தரதாசர் சொல்வது:
வனஜ பவாண்டதொளு ஹரிதாஸத்வ தீக்ஷை
பலுகஷ்ட கஷவெந்து காணோ
மனுஜாத்மகெ இது சுலபவல்லவோ ப்ராணி ||

'மம ஸ்வாமி ஹரிர் நித்யம் சர்வஸ்ய பதிரேவ ச' என்று ஸ்ரீஹரியின் மேல் வைக்கும் நம்பிக்கையே வைஷ்ணவ தீக்ஷை எனப்படுகிறது. 'ஹரிரேவ பரோ ஹரிரேவ குரு: ஹரிரேவ ஜகத்

பித்ருமாத்ரு கதி:' என்று ஸ்ரீமதாசார்யர் சொன்னதை நம்பி நடப்பவனே சுத்தமான வைஷ்ணவன்.

அகம் புறம் என இரண்டும் நாணயத்தின் இரு பக்கங்களைப் போல முக்கியமானவை. கோபிசந்தனம் தரித்தல், தப்தமுத்ரா தாரணம், ஏகாதசி விரதம் பின்பற்றுதல், தகுந்த ஆடை அணிதல், சரியான உணவினை உண்ணுதல், ஹரி நாமஸ்மரணம், சர்வமூல கிரந்தங்களை படித்தல் - இவை புற தீக்ஷை என்றால், மேலே கூறிய அவனே சர்வாத்மன் என்னும் சிந்தனை, அக தீக்ஷை எனப்படுகிறது.

ஆசார்ய: பவனோஸ்மாகம்.. என்னும் நிச்சய ஞானம் வைஷ்ண தீக்ஷை எனப்படுகிறது.

அயம் சவேஷ்டராதா மே சர்வானிஷ்டனிவாரக: |
சர்வோத்ருஷ்டோய மேவ்ருகஸ்ததீயோऽ ஹம் சமே பதி: ||
நாமசின்ஹாதினா தேஹே வஹின்னா வா ம்ருதாங்கனம் |
சாபாஹ்யா ப்ரோச்யதே தீக்ஷா ஹ்யஞ்ஞானம் ஞானினாம்ஹபி ||

வைஷ்ணவ தீக்ஷையை பின்பற்றினால், செய்யும் செயல்களை அனைத்தும் நற்பலன்களைக் கொடுக்கும். ஆகையால் உடலால், மனதால், செயலால் வைஷ்ணவ தீக்ஷையை பின்பற்ற வேண்டும். விஜயதாசர் தமது சுளாதியில் - முத்ராங்கித ரஹித மானவனு தானவனு - என்றார்.

மேலும்:
வீரவைஷ்ணவனாகி துரிதவெ பரிஹார
மாரிகளு நிந்திரதெ போகுவுது
தாருணியொளு ஹரஷரணரிகெ படியெ
பாரப்ருத் நாம விஜயவிட்டலன்ன
சேரிதவர பாத சேரலு நிர்வாண ||

'அனன்யாஸ் சிந்தயந்தோ மாம்... யோகக்ஷேமம் வஹாம்யஹம்' என்று சொன்னதால், அவனே சர்வாத்மன் என்று நம்பி, சாதனை வழியை பின்பற்றுபவரே சுத்த வைஷ்ணவன்.

ஶ்ரீமதாசார்யர்:
ரக்வத்யேவேதி விஷ்வாஸ: ததீயோऽஹமிதி ஸ்ம்ருதி: ।
ஷரணாகதி ரேஷாஸ்யாத் விஷ்ணௌ மோக்ஷப்ரதாயினீ ॥

இதனை தாசர் - ஶ்ரீபுரந்தரவிட்டல நம்ம பாலிஸுத்தானே' என்பதே நம் நம்பிக்கை என்றார்.

**ஜ்யேஷ்ட பகுள த்ரயோதசி**
**ஹரிக்காக விடவேண்டியவை**

அனைவரின் இலக்கு சுகம். இங்கும், மறு உலகத்திலும் சுகத்துடன் வாழவேண்டும் என்பதே விருப்பம். துக்கம் கொஞ்சமும் வேண்டாம் என்கிறோம். இவை அனைத்தையும் கொடுப்பவன் ஒருவனே. அவனே சர்வோத்தமனான ஶ்ரீஹரி. அவனின் அருளைப் பெறுவதற்கு அவன் கொடுத்த வழியையே பின்பற்றவேண்டும். செய்யக்கூடாதவற்றை செய்யக்கூடாது. இதையே கோபாலதாசர்:

ஹரியபேகு ஹரியனு ஐதுவதக்கெ
ஹரியபேகு பஹுஜன்மதககளெல்ல
ஹரியபேகஞான ஸ்ருதிகெ சம்மதவாகி
ஹரியபேகு மன ஹரியல்லெ ஆவாக
ஹரியன்னே நெனதவர சம்சாரத மூல
ஹரியபல்லனு காணொ ஹதனவரிது இன்னு
ஹரியன்னெ காணத சம்சாராம்புதி
ஹரியொளகெ பித்து ஹரிதாடுதிப்பர
ஹரிய நோடவர கண்டு சாதனமார்க
ஹரிய தோரு தன்னரிவந்தெ மாள்பனு
ஹரியவதார கோபாலவிட்டலனு
ஹரியே ஹே தொரெயே நானெந்து மரெயே ॥

ஹரி என்றால் (வினைச்சொல்) கன்னடத்தில் - கத்தரி, கிழி என்று பொருள். நம்மில் இருக்கும் கெட்ட செயல்கள், நடவடிக்கைகள் ஆகியவற்றை கத்தரிக்க வேண்டும். அப்போதே மனதில் ஹரி

நிலைத்திருப்பது சாத்தியம். இதை ஸ்ரீஹரியே செய்யவேண்டும். அதற்கே தாசர்:

பிடேனோ நின்ன பாத எந்தெந்திகெ
பொடவியொளகெ நினகெ சரி ஆரில்ல
த்ருடவாகி நீனல்லதெனகின்னு கதியில்லா || -- ஸ்ரீகோபாலதாசர்

மேலும்:

ஹரியன்னெ நெனெதவ நிரயவ கெத்தவ |
ஹரியன்னெ மரெதவ நிரய பித்தவ || -- ஸ்ரீகோபாலதாசர்

'பிடேனோ நின்னங்க்ரி ஸ்ரீனிவாசா' என்று அடம் பிடித்தால், ஸ்ரீஹரி பார்ப்பார். அவர் நம்மை பார்த்து விட்டால், இன்னும் வேறென்ன வேண்டும்.

**ஜ்யேஷ்ட பகுள சதுர்தசி**

**யார் அன்பானவர்?**

மக்களின் அஞ்ஞானத்தைப் போக்கி, சுக்ஞானத்தைக் கொடுக்கவேண்டி அவதரித்த மகாத்மர், ஸ்ரீபுரந்தரதாசர். சம்சாரத்தில் மூழ்கியிருக்கும் நமக்கு எது சரி, எது தப்பு என்று தெரிவதில்லை.

யாரு ஹிதவரு நினகெ மூரு மந்திகளொளகெ |
நாரியோ தாருணியோ பலுதனத சிரியோ || -- ஸ்ரீபுரந்தரதாசர்

இங்கு தாசர் மூன்று (நம்முடன் தினப்படி இருக்கும்) பொருட்களை, அவற்றை ஒப்பிட்டு நம்மிடம் கேட்கிறார். பெண், பூமி, செல்வம் - இது யாருக்குதான் வேண்டாம்? கண்டிப்பாக வேண்டும். ஆனால் எவ்வளவு என்பது முக்கியம். ஒவ்வொன்றைப் பற்றியும் ஆராய்ந்து, தத்வங்களை போதிக்கிறார். எவ்வளவு வேண்டுமோ அவ்வளவே இருந்து, பின் அவற்றை துறக்க வேண்டும் என்கிறார்.

வேறு வீட்டிலிருந்து வரும் பெண்ணை மனைவியாக்குகிறான். ராணி ஆக்குகிறான். தன்னில் பாதி என்று எண்ணி வாழ்கிறான்.

ஆனால் அவன் இறந்தால், அவள் உடன் வருவதில்லை. பிணத்தைப் பார்க்கக்கூட விருப்பப் படுவதில்லை. இத்தகைய பெண் அன்பானவளா? என்று கேட்கிறார். அதற்காகவே ஒரு இடத்தில் 'சதிசுதரிரபேகு அதிமோஹ பிடபேகு' என்றார். ராஜமகராஜா ஆகியோர் போரிட்டு வெல்லும் நிலம், அரசு ஆகியவற்றை தம்முடையது என்று சொல்வர். ஆனால் அவர் இறந்தால் எதுவும் கூட வருவதில்லை. இவனையே வெளியில் தூக்கிப் போடுவர். அதற்கே தாசர் - 'நெச்சதிது ஈ பாக்ய ஸ்திரவல்ல' என்றார். பலரை ஏமாற்றி சம்பாதித்த, நித்ய கர்மங்களை விட்டு சம்பாதித்த செல்வம் தொலைந்தால் - நம் கதி என்ன?

ஆக இந்த மூன்றையும் பெறுவதற்கு முன் யோசியுங்கள் என்றார். 'ஜொகெ தப்பித பளிக அர்த்த வியர்த்த' என்றார். இதற்கெல்லாம் பதிலாக தாசர் சொல்லியது இவ்வாறு:

அஸ்திர தேஹவனு நெச்சி நீ கடபேட | ஸ்வஸ்ததலி நெனெ கண்ட்ய பரமாத்மன
சித்த சுத்தியிந்த புரந்தரவிட்டலன | உத்தமோத்தமனெந்து சுகியாகு மனுஜ ||

நிலையில்லாதவற்றை விரும்பி அழியாதே என்றார். நிலையான, சுகம் அமைதியைக் கொடுக்கும் ஸ்ரீஹரியை நினை மனமே என்று, அவனே சர்வஸ்வாமி என்று போற்று என்று ஆறுதல் வார்த்தை கூறுகிறார்.

**ஜ்யேஷ்ட அமாவாசை**

**பஞ்சபேத பிரபஞ்சம்**

அனைத்து வேதங்களினாலும் பஞ்சபேதம் நிரூபிக்கப்பட்டுள்ளது. ஜீவ ஈஸ்வர பேத, ஜீவ ஜீவ பேத, ஜீவ ஜட பேத, ஜட ஜட பேத, ஜட ஈஸ்வர பேத. இதனை தாசரின் வாக்கில் காண்போம். ஜீவ ஈஸ்வர பேதத்தை ஜகன்னாததாசர் ஒரு பத்தியில் இப்படி சொல்கிறார்.

அஸ்வதந்த்ரனு ஜீவ ஹரிஸ
ர்வஸ்வதந்த்ரனு நித்யசுகமய

நிஸ்ஸ்வபத்தல்பக்ஞுஷக்த சதுக்க நிர்விண்ண |
ஹ்ரஸ்வதேஹி சனாத ஜீவனு
விஸ்வவியாபக கர்த்ரு பிரம்ம ச
ரஸ்வதீஷாத்மரனுத ஹரியெந்து கொண்டாடு ||
(ஹரிகதாம்ருதசாரம் 11-3)

ஈஷ நித்ய அனாதி ஸ்வரத சர்வக ஸ்வப்ர
காஷ சர்வக்ஞ விஷ்வவிலக்ஷணா
மேஷ அபரிச்சின்ன மூர்த்தி ப்ராணிகளிந்த
தா ஸாக்ஷியாகி பஹுகர்மகள மாடிஸுவ || -- ஸ்ரீகனகதாசர்

அணுரேணு த்ருணகளலி சம்பூர்ண நீனு
க்ஷண க்ஷணக்கெ அவகுணத கர்மி நானு
வாணியரசன பெத்த வைகுண்டபதி நீனு
தனு நித்யவல்லத பொம்பெயு நானு || -- ஸ்ரீகனகதாசர்

இப்படி ஜீவ-பிரம்மனின் வேறுபாடுகள் அனாதி காலத்திலிருந்து ஆதாரங்கள் மூலம் நிரூபிக்கப்பட்டன. இது நித்யமும் உண்மையானது. ஜீவ - ஈஸ்வரனுக்கு இருக்கும் பேதங்கள் மற்றும் சம்பந்தங்களை ஸ்ரீவியாசராஜர் இவ்வாறு சொல்கிறார்.

அளித நீனு நின்னாளு நானு
தந்தெ நீனு நின்ன கந்த நானு
ஷரண்ய நீனு நின்ன ஷரணாகத நானு
தயாளு நீனு நின்ன தயாபாதுர நானு
நோவ நோடின்னு காவரில்லெந்து
ஸ்ரீகிருஷ்ணனே என்ன சலஹபாஹுது || -- ஸ்ரீவியாசராஜர்

உலகத்தின் அனைத்து ஜீவர்களுக்கும் அனுபவத்திற்கு வந்த விஷயம் இது. ஜீவர்களிடம் இருக்கும் குறையை :

அல்ப ஷக்திரஸார்வக்ஞும் பாரதந்த்ர்யமு பூர்ணதா
உபஜீவகத்வம் ஜீவத்வம் || -- விஷ்ணுபுராணம்

இத்தகைய ஜீவரிடம் பரஸ்பரம் வேறுபாடு இருப்பது நிஜம். வாழ்க்கையில் ஒவ்வொரு நிலையிலும் தாரதம்யமும் இருக்கிறது.

ஸ்வரூபத்தில் இருந்து, மோட்சம் வரைக்கும் பேதம் இருப்பது சாஸ்திரங்களில் உள்ளது.

ஜீவர்களில் பல பேதங்கள் இருப்பது தாரதம்யத்திற்கு வழிவகுக்கிறது. முக்கியமாக நகரும், நகராத ஜீவர்கள் என. அஸ்வதந்த்ர ஜீவர்களை இரண்டு விதமாகப் பிரிக்கலாம். துக்கம் கொண்டவர்கள் மற்றும் துக்கம் இல்லாதவர்கள். நித்யமுக்தளான ரமாதேவி துக்கம் இல்லாதவள். பிரம்மனிடமிருந்து துவங்கி அனைத்து ஜீவர்களும் துக்கம் உடையவர்கள். இவர்களில் முக்தி யோக்ய, நித்ய சம்சாரி மற்றும் தமோயோக்யர் என்று மூன்று விதங்கள். சாத்விக, ராஜஸ மற்றும் தாமஸ குணங்கள் கொண்டவரை உத்தம, மத்யம மற்றும் அதம என்றும் பிரிக்கின்றனர். இதை கோபாலதாசர்:

சத்வரிகெ நவவித பக்தியனே தோரிஸி
மத்தெ மத்யமரிகெ சம்ஷயவு புட்டிஸி
மத்தரிகெ நவவித த்வேஷ பரிபூர்த்திஸி
நித்யதலி மாடித சாதனவு ஹெச்சிசுத || -- ஸ்ரீகோபாலதாசர்

வந்தல்லி சர்வஜீவரு சத்வரஜதமரு
யந்து பேதகளுண்டவர லக்ஷண || -- ஸ்ரீபிராணேசதாசர்

விதி மொதலு த்ருண பரியந்த சாத்விகரு |
இவரிந்த பின்ன ராஜசரு கோ பூனகர
த்ரிவித கதி உள்ளவரு |
சம்சாரிகளிகெ பின்னரு தமோகுணதமரு
கம்சாரியலி த்வேஷவர ஸ்வபாவ |

சாத்விகர்: தேவ ரிஷி பித்ரு நரர்கள். மோட்சத்திற்கு யோக்யமானவர்கள்.
ராஜசர்: பஞ்சபேத, தாரதம்ய, ஸ்ரீஹரியின் மகிமைகளை அறியாதவர்கள். லிங்கதேகம் நாசமாகாதவர்கள், தாமத்ரயத்திற்கு போகாதவர்கள்.
தாமசர்: அசுரர்கள் நான்கு விதம் - தைத்யர், ராக்ஷசர், பிசாசு மற்றும் நர-அதமர்கள்.

அனைத்து பொருட்களும் தத்வங்களும் மூன்று விதம் - ஆதிபூத, ஆதிதெய்வ, ஆத்யாத்மிக. ஜடப் பொருட்கள் ஆதிபூத. இந்த ஜடப் பொருட்களில், சேதனர்களின் தேகத்தில் இருக்கும் தத்வங்களுக்கு அபிமானியான தாத்விக தேவதைகளை, ஆதிதெய்வ என்று அழைக்கிறோம். இந்த ஆதிபூத மற்றும் ஆதிதெய்வகளில் அந்தர்யாமியாகி, நியாமகன் என்று அனைத்து செயல்களையும் செய்பவனான ஸ்ரீஹரியை ஆத்யாத்ம என்று சாஸ்திரங்கள் சொல்கின்றன.

மூல ப்ரக்ருதிகத த்ரிவிதானந்த பரமாணு
ஜாலகாரணதா சுஸ்திரவெனிபவு
ம்யாலெ அதரிந்தாத தத்வகளநித்ய மஹ
காலவெந்திக்யு நித்ய அணுகாலகள நித்யா
ஹேகெ மூரு வித ஜட வந்தொந்து மூரு மூ
ராகிரலு ஜடஜடகெ பேத ஸித்தா || -- ஸ்ரீபிராணேஷதாசரு

இந்த மூன்று தத்வங்களில் பேதங்களை பிரத்யட்சமாக சுலபமாக நிர்ணயிக்கிறோம்.

ஹீனரொளு பெரெயதலெ பஞ்சபேதவ திளிது
சானுராகதலி ஹரிசர்வோத்தமா
ப்ராணதேவரே குருகளெந்தரிது பஜிசுவரு
காணரு குசம்சார தாமத்ரயவைதுவரு ||

ஹரிதாசர்கள் இப்படி பஞ்சபேத, தாரதம்யத்தை தம் பற்பல கிருதிகளில் சாமான்யருக்கும் புரியும்படி இயற்றி, பெரிய உதவியை செய்திருக்கின்றனர். இதன் மூலம் ஆசார்யரின் ‘சித்தாந்தத பத்ததி பிடபேடி பிட்டு கெடபேடி’ என்று சொல்கின்றனர். இந்த பஞ்சபேதத்தை தெரிந்து கொள்வதால், நாம் அடையும் பலனை, ஜகன்னாததாசர் --

ஜீவ ஜீவர பேத ஜட ஜட
ஜீவ ஜடகள பேத பரமனு
ஜீவ ஜட விலக்ஷணனு எந்தரிது நித்யதலி |
ஈ விரிஞ்சாண்டதொளு எல்லா
டாவினலி திளிதைது பேத க

ளேவரதொளரிதச்யுதன பததைவது ஷீக்ரதலி || (ஹரிகதாம்ருதசாரம் 14-24)

**ஆஷாட சுத்த ப்ரதமை**

**எது மடி?**

மடி மாடுவுது மானவ நடதி நடதி திளிது
பிடதெ ப்ரதிதின நிர்மலதி மடி

காமக்ரோததலி திருகலு மடி அல்ல
காமன பளகக்கெ சோலலு மடி அல்ல
தாமஸ மதியல்லி இத்தரெ மடியல்ல
ஹேமத பயகெயல்லி சரிசலு மடியல்ல
யாம யாமக்கெ ஹரிய மரெதரெ மடியல்ல
நாமவ தரிசதித்தரெ அது மடி அல்ல
நேம நித்யகள தொரெதரெ அது மடியல்ல
பூமிபாலக நம்ம விஜயவிட்டலரேயன
நாமவனு மரெதவனு எந்திகு மடியல்ல || -- ஸ்ரீவிஜயதாசர்

'மடிமாடிகொம்ப பகெய திளிய பேகு மனுஜ' என்று ஒரு உகாபோகத்தில் சொன்னதை அறியவேண்டும். இங்கு நிஜமான மடியின் ரகசியத்தை வெளிப்படுத்துகிறார். அகத் தூய்மையால், துஷ்டகர்மங்களை விட்டு, ஸ்ரீஹரியின் நாமஸ்மரணையுடன் நற்காரியங்களை செய்வதே மடி என்கின்றனர்.

மடியாகிப்பெனெந்து உடிகெ முதரிகொண்டு - அடிகடெக்ஹாரிதரெ மடி யாகுவுதேனோ? -- என்று தாசர் கேட்கிறார். மேலும் 'விஜயவிட்டலனு அடிகெரகதவன மடி யாதக்கெ ஒப்பதோ' என்றும் சொல்கிறார்.

இதே சுளாதியில் அடுத்து தாசர் கூறியதாவது:

வசுதி சுரர கண்டு பைதரெ மடியல்ல
ஹுஸிய நுடிவங்க யாவது மடியல்ல
அசுர கர்மவனு ஆசரிசலு மடியல்ல

வாகு பத்தவில்லதவனிகெ மடியல்ல
குருகள நமிஸதித்தரெ மடியல்ல
துருள ஜனர சங்கவித்தரெ மடியல்ல
கோபதவன சங்கடலிரெ மடியல்ல
ஸ்ரீபதி விஜயவிட்டல னொலியதிரெ மடியல்ல || -- ஸ்ரீவிஜயதாசர்

**ஆஷாட சுத்த த்விதியை**

**விஷ்வமய நீனே**

வேத உபநிஷத்களில் வரும் விஷயங்களின் உரையை ஹரிதாச சாகித்யத்தில் காண்கிறோம். ஸ்ரீமதாசார்யர் நிறுவிய சித்தாந்தத்தின் விஷயங்களே இவை. உதாரணத்திற்கு:

விஷ்வதோமுக நீனே விஷ்வதோசக்ஷு நீனே
விஷ்வதோபாஹு நீனே விஷ்வதோ ஹஸ்த நீனே
விஷ்வதோ ஷ்ரவணனே விஷ்வதாரக நீனே
விஷ்யவியாபக சர்வவிஷ்வமய நீனே
விஷ்வநாமக ஹரி கோபாலவிட்டல
விஷ்வாஸ கொடு நின்ன விஷ்வசரணதலி || -- ஸ்ரீகோபாலதாசர்

ஸ்ரீகிருஷ்ணன் தனது விஷ்வ ஸ்வரூபத்தை அர்ஜுனனுக்குக் காட்டினான். அர்ஜுனன் 'பஷ்யாமி விஷ்வேஷ்வர விஷ்வரூபம்' என்றான். பகவந்தனிடம் இல்லை என்பதே இல்லை. இதையே தாசர்கள் நமக்கு நன்கு புரியுமாறு சொல்கின்றனர்.

விஷ்வதஸ் சக்ஷுருத விஷ்வதோமுகோ
விஷ்வதோ பாஹுருத விஷ்வதஸ்மாத் |
சம் பாஹுப்யாம் தமதி சம் பிரதத்ரை:
த்யாவா பூமிம் ஜனயன் தேவ ஏக: ||

'அந்தர்பஹிஸ்ச தத் சர்வம் வியாப்த நாராயணஸ்தித:' என்று அனைத்திடத்திலும் வியாப்தனான ஸ்ரீஹரியைக் குறித்து வேதங்கள் சொல்லி 'அணோரணீயான் மஹதோ மஹீயான் ஆத்மாஸ்ய ஜந்தோ நிஹிதோ குஹாயம்' என்கின்றன. இதையே ஜகன்னாததாசர்,

அணுவிகணுதரனாகி கனகெ கனதானாகி
அணுமஹத்துகள தெஸெயிந்த - தெஸெயிந்த நீ
விலக்ஷண நெனெஸிகொம்பெ ஸ்ருதியொளு ||

இப்படி ஸ்ரீஹரியின் வியாப்தியை வியாச - தாச சாகித்யங்கள் வர்ணிக்கின்றன. இதனால் சாதகர்கள் சாதனைகளை செய்வதற்கு வாய்ப்பை உருவாக்கினார்கள்.

**ஆஷாட சுத்த த்ருதியை**
**அங்கிதம் வேண்டும்**

அங்கிதவில்லத தேஹ நிஷேத்தவு
அங்கிதவில்லத காவ்ய ஷோபிசுது
அங்கிதவில்லதெ இரபாரதெந்து
சக்ராங்கிதவனு மாடி என்னங்ககெ
பங்கஜனாப ஸ்ரீபுரந்தரவிட்டலன
அங்கிதவெனகித்த குருவியாஸ முனிராய || -- ஸ்ரீபுரந்தரதாசர்

தத்வ சாஸ்திர உலகில், குருசிஷ்ய பரம்பரையைப் பற்றி கேள்விப்படுகிறோம். இதன் அங்கமான ஹரிதாச சாகித்யத்தில், ஹரிதாசர் என்று அழைத்துக் கொண்டவர்களின் நடவடிக்கைகள் தனித்துவமானவை. தீக்ஷை வாங்கிய ஹரிதாசர்கள் அங்கிதம் பெற்று தங்கள் வேலைகளை தொடர்கின்றனர். இதற்கு முழுமுதற் காரணமானவர் ஸ்ரீமதாசார்யரே என்று அவரது த்வாதச ஸ்தோத்திரத்திலிருந்து தெரிகிறது. 'ஆனந்ததீர்த்த' என்னும் அங்கிதத்து ஸ்தோத்திரங்களைப் போல, ஹரிதாசர்கள் தங்கள் கிருதிகளில் தங்கள் குரு அருளிக் கொடுத்த அங்கிதத்தை பயன்படுத்தியிருப்பதை காண்கிறோம். விஜயதாசர் கூறும்போது:

மனுஜரிகங்கிதவு ஷாந்தியு இல்லதலெ
அனுவாகி பேள்த தத்வகளு வியர்த்த காணோ || என்றார்.

படைப்பிற்கு வந்த ஒவ்வொரு ஜீவனும் அங்கிதனே (நாமதேயம் உள்ளவன்). ஆனாலும் பகவத் பக்தனாதவன் எப்படி கோபிசந்தனம், முத்திரை, தப்தமுத்ரா தாரணம் இவற்றை தரிக்கிறானோ, அப்படி

ஹரிதாசர்கள் விசேஷ அங்கித (முத்ரிகா) கொண்டவர்கள். ஸ்ரீஹரியின் பெயரான அங்கிதம் அவர்களின் பிம்பமூர்த்தியின் பெயர். குருவானவர் சிஷ்யரின் உத்தாரத்திற்காக (மேம்பாட்டிற்காக) கொடுத்த பெயர். இது ஸ்ரீஹரியின் பிரியத்திற்காக என்று அறியவேண்டும். இது நரஹரி தீர்த்தரிடமிருந்து துவங்கி இன்றுவரை வந்துகொண்டிருக்கும் வழக்கம். விஜயதாசர் தமது சுளாதியில் அங்கிதத்தைப் பற்றி சொல்வது:

ஸ்ரீனிவாசன பாதவனருஹ தோரபஹுது நம்பிதவரிகெ
வனஜனாபன பாத துதிபந்த ஷக்திகெ
கனபத ரூபதங்கிதவ கொட்டு மத்துஆனுனயதி ஷாந்தி பேளிஸி தத்வகள
மனதிந்தலேயபஹுது சுருணரிகெ || -- ஸ்ரீவிஜயதாசர்

தீக்ஷையைப் பற்றி புரந்தரதாசர் சொல்வதாவது:

வனஜ பவாண்டதொளு ஹரிதாஸத்வ தீக்ஷே
பலுகஷ்ட கஷ்டவெந்து காணோ
மனுஜாதமகெ இது சுலபவல்லவு ப்ராணி ||

ஹரிதாச தீக்ஷையின் ஒரு அங்கமே அங்கிதம் வாங்குதல். இது ஸ்ரீஹரியின் தாசானு தாசன் என்று நிரூபிக்கும் செயலாகும்.

**ஆஷாட சுத்த சதுர்த்தி**
**மோட்சத்திற்கான வழி**

பாகவத தர்மத்தை அனுசரித்து, ஸ்ரீஹரியின் மாஹாத்மய ஞானத்துடன் அவனில் செய்யும் பக்தியினால் மட்டுமே பகவந்தனின் பிம்பாபரோக்ஷம் கிட்டும் என்று ஸ்ரீவிஜயதாசர் தெரிவிக்கிறார்.

வேத ஸ்ருதி சாஸ்திர ஓதிதரேனு
ஸாதுகளிகெ ஸோது நடெயதனக
ஸோதிஸி விரதகள சரிஸிதரேனு
வேதார்த்த ஞானவே இல்லதனக

ஒதன ஷடுரஸ உண்டரெ ஏனு
மாதவகெ அர்பிஸதனக
மேதினியல்லி திருகிதரேனு
யாதவ கிருஷ்ணனன்னு நோடதனக
சாதிஸி தபவனெ மாடிதரேனு
ஸ்ரோதவ தெகெது ஈட்யாடதனக
ஸ்ரீதேவியர ஸன்ன நெனெஸிதரேனு
மோததீர்தரல்லி கூடதனக
நிதானதல்லி ஈ பரியல்லி நடெதரெ
மோத பாதேயாகுவது வைகுண்டக்கெ
பூதர ரூப ஸ்ரீவிஜயவிட்டல ஹரிய
பாரவே நெரெனம்பு புண்யவே உம்புவி || -- ஸ்ரீவிஜயதாசர்

வாழ்க்கையில் என்னவெல்லாம் செய்தால் ஸ்ரீஹரியின் தரிசனம் கிடைக்கும்? ‘மெல்லகெ மாதவன மனவ மெச்சிஸபேகு’ என்று ஸ்ரீபுரந்தரதாசர் சொல்வதைப் போல, நற்சிந்தனையுடன் ஸ்ரீஹரியின் மகிமைகளை ஸ்ரீமதாசார்யரின் வழிகாட்டுதலில் அறிந்து பின்பற்றவேண்டும். இப்படிச் செய்தால், ஸ்ரீஹரி பக்தர்களைப் பார்க்க வருவான் என்கிறார்.

அந்தரியாமியல்லி நிந்து பூஜெயகொம்ப
சந்தத சுமனஸ சந்ததிகள கைய்ய
சிந்தாமணி காணோ சிந்திசுவ ஜனகெ
தந்தி வரத நம்ம விஜயவிட்டலரேயா
குந்தி நந்தனனெ எந்து பொலித நோடு || -- ஸ்ரீவிஜயதாசர்

’பக்த்யைகவஷ்ய: ப்ரபு:’ என்பது போல, ஸ்ரீஹரியின் செய்யப்படும் திடமான பக்தியே முக்திக்கு காரணமாகும்.

**ஆஷாட சுத்த பஞ்சமி**

**எனக்கு அருள்வாய் தந்தையே**

நம் இந்திரியங்களும், அரிஷட் வர்கங்களும் நம்மை எப்படி துன்புறுத்துகின்றன என்பதை ஸ்ரீவியாஸராஜர் விளக்குகிறார். இவற்றின் ஆளுமையில், நல்வழியிலிருந்து தவறி புத்திகெட்டுப்

போகிறேன். இதிலிருந்து என்னைக் காப்பாற்றவும் என்று ஸ்ரீகிருஷ்ணனிடம் வேண்டுகிறார்.

இந்திரியங்களெம்ப கள்ளரைவரு
பந்திஸி தம்ம விஷயகொய்தென்ன
கந்திஸி ஞானவெம்ப த்ருஷ்டிய
எந்தெந்தின தர்ம தனவனொய்யரு
இந்திரேஷ லோகபதி சிரிகிருஷ்ண காயென்ன தந்தே || -- ஸ்ரீவியாசராஜர்

அரிஷட்வர்கங்கள் என்னும் காமம் முதலானவை, நம் மனதையே வீடாக்கிக் கொண்டு, இந்திரியங்களின் மூலமாக செய்யக்கூடாதவற்றை செய்து, நம்மை இந்த வாழ்க்கைச் சுழற்சியிலிருந்து தப்ப முடியாதவாறு செய்கின்றன. ஹே தீனநாத! என்னை இவற்றிலிருந்து காப்பாற்று என்கிறார்.

காமவெம்ப ஹெச்சின காடுகிச்சொந்து கடெயலென்ன சுடுதலிதெ
க்ரோதவெம்ப ஹெப்புலி ஹஸிது பந்து கடயலின்ன தின்னுதலிதெ
லோபவெம்ப துஹூரக்கஸனொந்து கடெயலின்ன ஹீருதல்லைதானே
மோஹவெம்ப கக்கத்தலெயு கவிது திக்கு தெஸெ ஏனு திளியதிதெ
வரவெம்ப மதுஸொக்கித காடானெ பந்து கடெயலென்ன ஸீளுதலிதெ
மத்ஸரவெம்ப விஷத சேளொந்து கடெயலென்ன ஊருதலிதெ
ஈ பரி பவவெம்படவியலி நானாபரிய ஷத்ருகளிகொளகாதெ
ஸ்ரீபதி பரமதயாநிதி தீனனாத என்னொடெய ரக்ஷிஸு ஸ்ரீகிருஷ்ண || -- ஸ்ரீவியாசராஜர்

மேலும் ஆதிபௌதிக, ஆதிதெய்விக, ஆத்யாத்மிக என்னும் பிரச்னைகள் மனிதனின் கழுத்தை அழுத்துகின்றன. காமாதி அரிஷட்வர்கங்கள் நம்மை எப்படி பீடிக்கின்றன என்பதை ராஜர் தெளிவாகக் கூறுகிறார். இவைகளினால் நம் மற்றும் நம் வம்சமே பிரச்னையில் சிக்குகின்றன. இவற்றிலிருந்து காப்பாற்று என

வேண்டுகிறார். இறுதியில் ராஜர், நமக்கு தைரியம் அளிப்பது எப்படி?

ஓவினோவி மனதல்லி காவ கிருஷ்ணனிருதிரெ ।
ஆவாகலெல்லிஹதாவபய நினகெ ஜீவ ॥ -- ஸ்ரீவியாசராஜர்

**ஆஷாட சுத்த சஷ்டி**

**பாகவதர்களின் நட்பு**

மனிதன் கூடி வாழும் இனம். ஆனால், யாருடன் நட்பு வேண்டும் யாரின் நட்பு வேண்டாம் என்னும் அறிவு தேவை. அனைத்து நல்லது கெட்டதும் இந்த நட்பின் காரணமாகவே ஆகிறது. 'சங்காத் சஞ்சாயதே காம:' என்று அழிவிற்கும் காரணம் நட்பாக இருக்கலாம். இந்த நட்பைப் பற்றி கனகதாசர் சொல்வதை பார்க்கலாம்.

சஜ்ஜனர சங்கதொளகிரிசென்ன ரங்கா ॥ப॥

துர்ஜனர சங்க நானொல்லெ ரங்கா ॥அப॥

கூடித சபெயலி குத்ஸிதவ நுடிவன சங்க
நாடினோளகன்யாய மாடுவவன சங்க
பேடிதரு கூடதிருவ கடுலோபிய சங்க
மூட மூர்கர சங்கபலு பங்க எலோ ரங்கா ॥1॥

குருசதிகெ பரசரிகெ எரடு பகெவர சங்க
குரு நிந்தெ பர நிந்தெ மாடுவவர சங்க
பர ஹிதார்த்தவ தர்மபரியதவர சங்க
மருள பாமர சங்க பலு பங்க எலோ ரங்கா ॥2॥

ஆகமத அனன்யவனரியதவர சங்க
ரோகதல்லி ஆவாக மலகுவன சங்க
காகினெலெ ஆதிகேசவனங்க்ரி நெனெயதிஹ
பாகவதர சங்க பலு பங்க எலோ ரங்கா ॥3॥ -- ஸ்ரீகனகதாசர்

ஸ்ரீகனகதாசர் கூறியிருக்கும் இந்த பட்டியலில் இல்லாத மனிதர் இல்லையென்றால்தான் ஆச்சரியம். நல்-நட்பு / கூடா-நட்பு பற்றி புராண இதிகாசங்களில் பல உதாரணங்களைப் பார்க்கிறோம். லௌகிக வாழ்க்கையில் பலருக்கும் இந்த அனுபவம் இருக்கலாம். அனைத்து ஹரிதாசர்கள் சொல்வதும் இதுவே. 'சங்கவாகலி சாது சங்கவாகலி'. பாகவதர்களின் நட்பில் மட்டுமே வாழ்க்கையில் நிம்மதி. துர்ஜனர்கள் தாமும் சுகிக்காமல் மற்றவர்களையும் நிம்மதியாக இருக்கவிடாமல், இறுதியில் துக்கத்தில் விடுவார்கள். இது சத்தியம். துர்ஜனர்கள் எங்கும் இருப்பார்கள். அதற்கே தாசர்கள், அத்தகையவர்களை அடையாளம் காணும் வழிகளை சொல்கிறார்கள். அவர்களின் நடவடிக்கைகளை பட்டியலிட்டுக் கொடுத்து நமக்கு எச்சரிக்கை விடுக்கிறார்கள்.

**ஆஷாட சுத்த சப்தமி**

**ஆசார்யர் என்றால் யார்?**

யார் சாஸ்திரோக்தமாக ஆசாரத்தில் இருந்து, சாஸ்திரார்த்தங்களை சொல்லிக் கொடுக்கும் வழிகாட்டியாக இருக்கிறாரோ அவரே ஆசார்யர். இந்திரியங்கள், தேகம், மனது, புத்தி என அனைத்திலும் தூய்மையாகவும், ஆத்யாத்ம கல்வியை போதிப்பவரும், அதைப் போலவே நடப்பவரும் ஆசார்யர். உடல், சொல், வாக்கு என அனைத்தாலும் ஒரே விஷயத்தை செய்து / சொல்லி வரும் ஞானி - ஆசார்யர். இப்படி இருக்கும் ஆசார்யரை, வேதம் 'ஆசார்ய தேவோ பவ' என்கிறது. ஸ்ரீபுரந்தரதாசர் ஆ-சா-ர என்பதைப் பற்றி விளக்கும் பாடல் இவ்வாறாக இருக்கிறது.

ஆசாரியரெம்பவர இவர நோடி ||ப||

ஆசார பல்லவரெ ஆசாரியரு ||அப||

அ எந்தரெ அதி தத்வவ திளிதவரு<br>
அதளித மத த்வம்ஸ மாடுவரு<br>
அதிதி ஆத்யாமதரிகெ அன்னவன்னெ இக்குவரு<br>
ஆயுத வ்ருத்தியன்னு மாடுவரு ||1||

சா எந்தரெ சஞ்சலாத்மவனெ அளிதவரு
சென்னாகி வேதஷாஸ்த்ரவனெ ஓதிதவரு
சலனெயில்லதெ குருஹிரியரிகெ வரகுவரு
சாஸன பிட்டவரு ஆசார்யரு ||2||

ரு எந்தரெ ருணவ மாடதித்தவரு
ரிபுமிதஸமரெந்து காம்புவரு
ரௌப்ய ஸௌவர்ணவன்னு ம்ருத்திகெயெந்து நோடுவரு
ரமாதவ புரந்தரவிட்டலன பல்லவரே ஆசார்யரு || -- ஸ்ரீபுரந்தரதாசர்

இங்கு தாசர் ஆசார்யர் என்ற சொல்லை வைத்து, அனைத்து அக-புற தகுதிகளை பட்டியலிடுகிறார். இந்த குணங்கள் நம்முள் எவ்வளவு இருக்கின்றன என்பதை நாம் பார்க்க வேண்டும். ஆசார விசாரங்களை மற்றவர்களுக்கு அறியக் கொடுப்பவரே ஆசார்யர், என்றால் அவர் எப்படி உண்மையானவராக இருக்க வேண்டும்?. 'யத்யதாசரதி ஸ்ரேஷ்ட: தததேவேத ரோஜன:' என்கிறான் ஸ்ரீகிருஷ்ணன். உத்தமராக இருப்பவர்களின் நடைபாவனைகளை மற்றவர்கள் பின்பற்றுவர் என்ற பிறகு, ஆசார்யர் என்று சொல்லிக் கொள்பவர்களின் நடவடிக்கைகள், மற்றவர்கள் பின்பற்றுவதைப் போல இருக்கவேண்டும் அல்லவா? பிரம்மாண்டத்தில் முதன்முதலான ஆசார்யர், வாயுதேவரின் அவதாரமான ஸ்ரீமதானந்த தீர்த்தர். 'ஆசார்ய: பவனோஸ்மாகம்' என்றார் ஸ்ரீவாதிராஜர்.

## ஆஷாட சுத்த அஷ்டமி
## ஹரிதாஸரின் ஆத்ம பக்தி

பக்தி சாகித்யம் என்றே பெயர் பெற்றது ஹரிதாச சாகித்யம். காரணம் பக்தியே முக்திக்கு வழி என்றனர் ஹரிதாசர்கள். ஸ்ரீமதானந்த தீர்த்தர்,

மாஹாத்ம்யஞான பூர்வஸ்து சுத்ருட: சர்வதோதிக: |
ஸ்னேஹோ பக்திரிதி ப்ரோக்தஸ்தயா முக்திர்னசான்யாதா ||
என்கிறார்.

பகவந்தனின் மகிமைகளை தெளிவாக அறிந்து, ஜடப்பொருட்களின் மேல் நாம் வைத்திருக்கும் அன்பைவிட அதிகமான, நிரந்தரமான அன்பே பக்தி எனப்படுகிறது. இதை பின்பற்றினாலே முக்தி என்றார். ஸ்ரீஹரி பக்திக்கு மட்டுமே காட்சியளிப்பானே தவிர வேறு எதற்கும் அல்ல. ஏனென்றால் ஸ்ரீஹரி --

'பக்த்யைவ துஷ்டிமப்யேதி விஷ்ணுர் நான்யேன கேனசித்', 'அமலா பக்திஸ்ச தத் சாதனம்', 'பக்த்யை இகவஷ்ய: ப்ரபு:' --

ஆகவே ஹரிதாசர்கள் பக்திக்கு முக்கியத்துவம் கொடுத்து, அனைத்து நிலைகளிலும் அதை முன்னெடுத்திருப்பதை காண்கிறோம். அதற்கே புரந்தரதாசர் -

சகல சாதனகெல்ல சித்திகொளிசுவுது
பகுதி காரணவல்லதெ பேரெ சாதனவுண்டே || என்றார்.

பக்திக்கு அபிமானி தேவதை பாரதிதேவி. இந்த பக்தியை பின்பற்ற அவரின் அருள், முக்யபிராணரின் மற்றும் ஸ்ரீஹரியின் அருளும் வேண்டும்.

பகுதிகபிமானி பாரதிதேவியர கருண
யுகுதி ஸாதனவெந்து மனதி பஜிஸி
அகிலேஷ புரந்தரவிட்டல தானொலிவ || -- ஸ்ரீபுரந்தரதாசர்

இன்னொரு இடத்தில் --

அக்ஷயதிந்தலி கொட்டு பகுதிய ரக்ஷிசென்னலு அனுதின |
பாரதி தேவிய நெனெ நெனெ | நிருத பகுதிகிது மனெ மனெ || என்றார்.

பக்தி செய்வதற்கான ஒன்பது விதங்களை சாஸ்திரத்தில் சொல்லியிருக்கின்றனர். பகவத் பக்தர்களில், சாத்விகர்களில் இருக்கவேண்டிய பக்தியின் லட்சணங்களும் இதுவே.

ஸ்ரவணம் கீர்த்தனம் விஷ்ணோ: ஸ்மரணம் பாதசேவனம் |
அர்ச்சனம் வந்தனம் தாஸ்யம் சக்யம் ஆத்ம நிவேதனம் ||

பக்தி சித்தாந்தம் என்று பெயர் பெற்றிருக்கும் மத்வ சித்தாந்தத்தின் மொழிபெயர்ப்பான இந்த ஹரிதாச சாகித்யம் பக்தி சாகித்யம் என்றே அழைக்கப்படுகிறது. மேலும் ஹரிதாசர்கள் நவவித பக்தியின் மூலமாகவே பகவந்தனை காணும் முயற்சியில் ஈடுபட்டனர்.

ஹரிதாச சாகித்யத்தின் சாரம் அல்லது இலக்கு 'ஹரிபக்தி'. ஈசனான ஸ்ரீஹரியிடம் தாசனாகி தன்னை அர்ப்பணிக்கும் வகையாக இது இருக்கிறது. இதற்காகவே 'பக்த்யைவ லப்த: ப்ரபு:' - பக்தியினாலே பிரபுவை காணலாம் என்று பொருள். புரந்தரதாசர் இவ்வாறு சொல்கிறார்.

பக்தவத்ஸலனெம்ப பிருது பொத்தா மேலே
பக்தராதீனனாகி இரபேடவே?

ஹரிதாசர்கள் பகவந்தனை ஸ்துதிப்பதற்கு – நினைப்பதற்கு – பாடுவதற்கு தேர்ந்தெடுத்த விதம் – கீர்த்தனைகள். இதனை துவக்கி வைத்தவர் ஸ்ரீமதாசார்யரே. அவரின் த்வாதச ஸ்தோத்திரம் ஹரிதாசர்களுக்கு ஆதாரமாயிற்று. பக்தியைப் பற்றி கூறும் புரந்தரதாசர்:

ஹரிய ஒன்பத்து பக்திய பல்ல தீர
மரளி, சம்ஸ்ருதிய தாரிகெ ஹுட்டி பார || என்றார்.

ஸ்ரீவாதிராஜரின் வாக்கு:

நிஜஜாதியலி புட்டி அதமனாகிரபேட
பஜிஸு பக்திகளிந்த மஹாமஹிம க்ருஷ்ணர ||

இதன் சாராம்சமாக ஸ்ரீபாதராஜர் கூறியது:

பக்தி பேகு விரக்தி பேகு சர்வ
சக்தி பேகு முந்தே முக்திய பயசுவகெ ||

ஹரிதாசர்களின் கீர்த்தனை சாகித்யம் பக்தி சாகித்யம் என்று அழைக்கப்படுகிறது. தாசர்களின் இறுதி இலக்கான பகவந்தனின் சாட்சாத்காரம் (தரிசனம்), ஞான வைராக்யத்துடனான பக்தியுடன்

மட்டுமே என்று அறிந்து, அதனை அனுபவித்து, அனைவருக்கும் போதித்தனர்.

**ஆஷாட சுத்த நவமி**

**ஹரி நாமஸ்மரணை**

மொத்த ஹரிதாச சாகித்யத்தின் சாரம் இருப்பது ஹரி நாமஸ்மரணையில். உடன் சாதகர்களினால் செய்யவைப்பதும். இதற்கான காரணம் ஹரி நாமஸ்மரணையே அனைத்தும் ஆகும். இஹ பரங்களில் அனைத்தையும் கொடுத்து, இறுதியில் மோட்சத்தையும் கொடுப்பது இதுவே.

நாமவே காயுவுது நாமவே உளிபுது
நாமவே சர்வபவித்ர மாடுவுது
நாமவெ கன துரித சம்ஹார மாடுவுது
நாமவெ நெனவங்கெ வஜ்ராங்கியப்புது
நாமவெ சகல பக்தி ஸ்தோமவ பாலிஸுவுது
நாமவெ நிந்தல்லி குளிதல்லி மஹாபாக்ய
நாமபொந்து நெனெயெ விஜயவிட்டலன
தாமவெ ஆகுவுது தடெயதெ நமகெல்லா || -- ஸ்ரீவிஜயதாசர்

ஸ்ரீஹரி நாமஸ்மரணையைப் பற்றி நிரூபித்து தாசர் மேலும்:

மதிவந்தர ப்ரிய விஜயவிட்டலன
கதன நாமாம்ருதக்கெ ப்ரதி காணெ கலியுகதி ||

த்யான தான கர்ம ஏனேனு மாடலு
ஊனவல்லதெ சம்பூர்ணவாகது காணோ
க்ஷோணியொளகெ சமானவில்லத நாம
தீனனாகி நிந்து தினக்கொம்மெ நெனெதடெ
தியானதான கர்ம ஆவாவ காலக்கெ
தானெஸகிவ பலகெ நூருமடி உண்டு
தானவாந்தக ரங்க விஜயவிட்டலன
ஜோணிகெ நெனஸலு மாணதலெ கதி || -- ஸ்ரீவிஜயதாசர்

நாமவெ சகல சாதனக்கெ பலு சாதன |
நீ மரியதிரு விஜயவிட்டலன்ன || -- ஸ்ரீவிஜயதாசர்

**ஆஷாட சுத்த தசமி**

**பரமபுருஷ ஸ்ரீஹரி**

ஸ்ரீஹரியின் மகிமைகளை பாமரர்களுக்கும் தெரிவித்து, அவர்களை புனிதராக்கும் முயற்சி ஹரிதாசர்களுடையது. ஸ்ரீஹரியைப் பற்றிய ஞானத்தை சஜ்ஜனர்களுக்கு அளித்து, ஹரிபக்தியை உண்டாக்கி, ஸ்ரீஹரியின் அருளுக்கு பாத்திரராக்கும்படி தயாரிக்கும் சாகித்யம், ஹரிதாச சாகித்யம். இங்கு ஸ்ரீஹரியின் ஸ்வரூபத்தைப் பற்றிய ஒரு பார்வை.

ஹரி பரமபுருஷ ஹரி பராத்பர தேவ
ஹரி சதுரனாஷ ரஹித ஹரி அசிந்த்யாத்புத
ஹரி அப்ராக்ருத ஹரி ப்ரளய விரஹித
ஹரி முக்தராஷ்ரய ஹரி சர்வந்தர்யாமி
ஹரி ஜீவ ஜடக்கெ பின்ன ஹரி அணு மஹாரூப
ஹரி கர்த ஜடத்காரண ரமாதிகள ப்ரீய
ஹரி வைகுண்ட ரமண விஜயவிட்டலரேய
ஹரி தோருவனு பகுதி கைகொண்டு மனுஜரிகெ || -- ஸ்ரீவிஜயதாசர்

இங்கு தாசர், அனந்தகுண பரிபூர்ணனான, சர்வதோஷ ரஹிதனாத ஸ்ரீஹரியின் அற்புத மகிமைகளின் சாரத்தைப் பாடியிருக்கிறார். இதுவே பகவந்தனின் சிறப்பு. ஸ்ரீஹரி அனைவரிடமிருந்து வேறுபட்டு, ஸ்வதந்த்ரனாகி இருக்கும் புருஷோத்தமன். இவனை அனைத்து வேதங்களும் புகழ்கின்றன.

இந்த விஷயத்தையே கோபாலதாசர் இன்னொரு விதத்தில் பாடியிருக்கிறார்.

சர்வரிகெ ப்ரேரக சர்வகர்தா போக்தா
சர்வத்ரதலி வியாப்த சர்வஷப்த வாச்ய
சர்வகுண பரிபூர்ண சர்வதோஷதூர
சர்வஞானகம்ய சர்வபக்திமூர்த்தி

சர்வேஷ செலுவ கோபாலவிட்டலரேயா
சர்வாந்தர்யாமி சார்வபௌம நமோ || -- ஸ்ரீகோபாலதாசர்

அனைத்து சாஸ்திரங்களில் வந்த முக்கிய நற்குணங்களை மிகவும் அழகாக, அனைவருக்கும் புரியுமாறு ஹரிதாசர்கள் பாடிக்கொடுத்து, நமக்கு மிகப்பெரிய உதவியை செய்திருக்கின்றனர். இவற்றின்மூலம் இன்னும் மேலதிக பாடத்தை நாம் படிக்கவேண்டும்.

**ஆஷாட சுத்த ஏகாதசி**

**ஹரி தினம்**

ஏகாதசி குறித்து ஸ்ரீவாதிராஜர் கூறும்போது:

ஹரி தினக்கெ மறுதினக்கெ சரியில்லவெந்தெந்து
ஹரிவ ஹாவனு ஹிடியலெ? ||

'விரதகளெல்லவு ஹரிதினத விரத ஹிந்தெ' என்று புரந்தரதாசர் கூறினால், விஜயதாசர் 'சகல தினங்களு ஹரிதினத தருவாய' என்றார். இதற்கெல்லாம் மூலகாரணம், ஸ்ரீமதாசார்யரின் வசனம்.

நேத்ருஷம் பாவனம் கிஞ்சின்னராணாம் புவி வித்யதே |
யாத்ருஷம் பத்மனாபஸ்ய தினம் பாதகஹானிதம் ||
கிருஷ்ணாம்ருத மஹார்ணவம்

பாவத்தை பரிகரிக்கும் விரத்தில் ஏகாதசியைப் போன்றதொரு விரதம் இந்த உலகிலேயே இல்லை. மனிதப் பிறவி ஸ்ரீஹரியின் கருணை. ஜீவன் தனது சாதனைகளை செய்யவேண்டும். அவற்றில் மிக அதிக சிறந்த பலன்களைக் கொடுக்கும் விரதம் -- ஏகாதசி விரதம். அனைவருக்கும் இது கட்டாயமாகும். ஸ்ரீபாதராஜர் கூறும்போது:

போகசயனன தினதி சகல
போககளன்னு தானு தொரெது
பாகவதர மேள்திந்த ஜாகரணெ மாடதவன ஜன்ம
வியர்த்தவல்லதெ? -- என்று கேட்கிறார்.

புரந்தரதாசா் இன்னும் மேலாக 'ஷௌரிதின விரதவனாசரிசதவ ப்ரஷ்ட' என்றார். இன்னொரு இடத்தில் 'ஹரிதினதலி உண்ட நரரிகெ கோர நரக தப்பது' என்று வேத சாரத்தை தெரிவிக்கிறார்.

வேத இதிகாச புராணங்களில், ஏதாதசி விரதத்தைப் பற்றி பல கதைகள் உண்டு. ஆதாரங்களும் உண்டு. ஏகாதசி விரதத்தைப் பற்றி பல்வேறு தாசர்கள் பாடியிருக்கின்றனர். சிலவற்றை பார்ப்போம்.

வியாசராஜர்: ஹரிநாம ஹரிபாத தீரதவிரலு
ஹரிதின ஹரிதாஸர பாதரஜவிரலு
துரிதத பயவ்யாகெ நரகத பீத்யாகெ ।

கனகதாசர்: நேமதி உபவாச ஆ மஹா ஏகாதசி
காமஜனகவன்னு ப்ரேமதி ஸ்மரிசதெ ।

விஜயதாசர்: ஏகாதசிய மாடதவன விரதவு யாதகெ ।

ஜகன்னாததாசர்: நாகேந்த்ர ஷயனன தினதுபவாஸவ
ஜாகவ மாடதே மலகிப்பரா ।

பிராணேச தாசர்: ஹரிதினவிரத த்ருடவாதவ தன்ய ।

**ஆஷாட சுத்த த்வாதசி**

**தேவதேவோத்தம ஸ்ரீஹரி**

பகவத்கீதையில் ஸ்ரீகிருஷ்ணன், அனைத்து புருஷர்களைவிட உத்தமனான புருஷோத்தமன் - நானே என்று சொல்கிறார்.

யஸ்மாக்ஷரமதிதோ ஹமக்ஷரதபி ஜோத்தம: ।
அதோஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம: ॥

ஹரிதாசர்கள் பலவிதங்களில் ஸ்ரீஹரியே சர்வோத்தமன் என்று வர்ணித்து பாடியிருக்கின்றனர். ஸ்ரீவாதிராஜர்:

சிரிதேவி அவனிகரஸி சுரர குரு
விரஞ்சி பவனரு அவன குவரரெம்பரு
உரகாதிபனாவன மஞ்ச விஹகேஷ்வரனாவன வாஹன
புரஹரனாவனுங்குட நீர பெத்த நி
ர்ஜரபதி அவன சரண சேவகனாத
சுரரொளகெ ஹயவதனகேன்னரனு சரியொந்துசுருவெனோ || -- ஸ்ரீவாதிராஜர்

பல ஹரிதாசர்களும் ஸ்ரீஹரியை சர்வோத்தமன் என்று சொல்லி பாடியிருக்கின்றனர். அவற்றில் சிலவற்றை பார்ப்போம்.

ஈ பரிய சொபகாவ தேவரலி நா காணே |
...
நிகமகோசர புரந்தரவிட்டலகல்லதெ
மிகிலாத தெய்வகளிகீ பாக்யவுண்டே || -- ஸ்ரீபுரந்தரதாசர்

பிடி பிடி சந்தேஹவு பொடவிமனஜரெல்ல
ஒடெயனொப்பனெ ஜககெ ரங்கவிட்டல || -- ஸ்ரீஸ்ரீபாதராஜர்

அனந்த குணகளிந்ததிக லகுமிகெ ஆதிபுரந்தரவிட்டலனு |
கனரு சமரு இல்ல ஜகதொளு ஹனும ஹ்ருத்பத்மவாசிகெ || -- ஸ்ரீபுரந்தரதாசர்

விதித மைவகளெல்ல விஷ்ணுவின ஹிந்தெ
இதகெ தப்பிதரெ நா பணி கணவ ஹிடிவெ || -- ஸ்ரீபுரந்தரதாசர்

ஸ்ரீஹரியின் வாக்கு இதுவே. சர்வோத்தமனான ஸ்வாமி, யாருக்கும் கீழ் இல்லை.

ருத்ரம் சமாஸ்ரிதா தேவா ருத்ரோ ப்ராஹ்மண மாத்ரித: |
பிரம்மா மாமாஸ்ரிதோ நித்யம் நாஹம் கிஞ்சிதுப்ராஸ்ரித: ||

**ஆஷாட சுத்த த்ரயோதசி**

**தெய்வ பலமே பலம்**

ஹரிதாசர்களின் ஒருமித்த குரலானது இதுவே 'தேனவினா த்ருணமபி ந சலதி'. அனைத்து ஜீவர்களையும் படைத்தவன் ஸ்ரீஹரி. ஹரியின் கருணையே பலம். அதுவே வாழ்க்கை.

தாசர்களின் வாக்கு இப்படியாக இருக்கிறது.

ஆவ பலவித்தரேனு தெய்வபலவில்லவகெ |
ஸ்ரீவாசுதேவன பல நிஜவாகி இல்லதனக ||

ஸ்ரீவியாசராஜர் 'ஆபாப பகெயிந்த நீனே ரக்ஷிஸுவெயோ | தேவாதிதேவ ஸ்ரீகிருஷ்ண நீனென்னனு ||' என்கிறார்.

த்ரவ்யம் கர்ம ச காலஸ்ச ஸ்வபாவோ ஜீவ ஏவ ச |
யதனுக்ரஹத: சந்தி ந சந்தி யதுபேக்ஷயா ||

அனைத்தும் ஸ்ரீஹரிக்கே சொந்தம். அவன் அருள் இல்லையெனில் எதுவும் நடக்காது. இது சாஸ்திரங்களின் சாரம். இதற்கு சமமான தாசரின் வாக்கு.

நின்னாதீன ஷரீர கரண சேப்பெகளில்ல
நின்னாதீன பந்த மோக்ஷ நிரயகளு
நின்னாதீன யோக்யதெ சாதன சாத்யகளெல்ல
நின்னாதீன சுக்ருத துஷ்க்ருத பலவு
நின்னாதீன விஷயாத்ம புத்திகளெல்ல
நின்னாதீன சராசரவெந்து ஷ்ருதி சாருதிதெ ||

.. ஹரியே பரமமுக்ய ஹரிவ்யாபார | விஹித த்ருண ஒந்து ஜலிசலாபதெ' -- இதுவே அனைத்து சாஸ்திரங்களும் சொல்வது.

இத்தகைய பரமாத்மா சிறந்த கருணைக்கடல். 'ஏனு கருணா நிதியோ ஹரி' என்று ஜகன்னாததாசர் கூறுகிறார். பாகவதாகாரர் 'முஹ்யந்தியம் சூரய:' என்கிறார். ஸ்ரீஹரியை கருணாமயி என்று வர்ணிக்கிறார். தன் பக்தர்களை அனைத்து காலங்களிலும்,

நிலைகளிலும், வகைகளிலும் ஸ்ரீஹரி காப்பாற்றுகிறான். இதற்கே இவனை 'அநிமித்த பந்து' (எதையும் எதிர்பாராமல் உதவுபவன்) என்கின்றனர்.

கருணைக்கடல் என்று வர்ணித்த ஜகன்னாததாசர் இன்னொரு இடத்தில்:

'ப்ரதிதிவச தன்னங்க்ரி சேவாரத மஹாத்மரு மாடுதிஹ சம்
ஸ்துதிகெ வஷனாகுவனிவன காருண்யகேனெம்பே ||' என்கிறார்.

**ஆஷாட சுத்த சதுர்தசி**
**வாழ்க்கையின் உண்மைப் பொருள்**

சம்சாரவெம்பந்த பாக்யவிரலி ||ப||
கம்சாரி நெனெவெம்ப சௌபாக்யவிரலி ||அப||

தந்தெ நீனெ க்ருஷ்ண தாயி இந்திரெதேவி
பொந்தித அண்ணனு வனஜசம்பவ
இந்துமுகி சரஸ்வதிதேவியே அத்திகேய
எந்தெந்திகு வாயுதேவரெ குருவு ||1||

பாரதிதேவியே குருபத்னியு எனகெ
கருடசேஷாதிகளே குருபுத்ரரு
ஹரிதாசரெம்புவரெ இஷ்டபாந்தவரெனகெ
ஹரிபஜனெ நடெயுதிஹ ஸ்தளவெ மந்திரவு ||2||

சருவாபிமானவனு த்யஜிசுவுதெ சுஸ்தான
ஹரியனாமவெ இன்னு அம்ருதபான
வரத புரந்தரவிட்டல நின்ன பாதத்யான
கருணிஸி அனவரத கரபிடுது காயே ||3||

சம்சாரம் என்றால் பிறந்துவந்த மனிதனின் உற்றார், உறவினர், குடும்பம், நண்பர்கள் என ஒரு பொருள் இருக்கிறது. மனைவி மக்களுடன் இவர்கள் அனைவரின் சமூகத்தில் வாழ்க்கையை நடத்துவது சரி. ஆனால் தாசர்கள் இந்த சம்சாரத்தில் இருந்தாலும், அவர்களின் சிந்தனை வேறாக இருக்கிறது. சம்சாரத்தை ஒரு

பவித்ரமான ஆசிரமமாகக் கண்டனர். இந்த நிலையில் இருப்பவர்கள், நித்யசுகமான மோட்சத்தை விரும்புகிறவர்களாக இருப்பர்.

இவர்கள் சிந்தனை இப்படியாக இருக்கும். ஸ்ரீகிருஷ்ணனே தந்தை. லட்சுமிதேவியே தாய். பிரம்மனே அண்ணன். சரஸ்வதி தேவியே அண்ணி. வாயுபாரதியர் குரு மற்றும் குருபத்னி. இந்த குருவின் புத்ரரே கருடர். சொந்தங்கள் ஸ்ரீஹரியின் தாசர்கள். இவர்கள் அனைவரும் இருக்கும் இடமே ஹரிபஜனை நடக்கும் கோயில். இத்தகைய சிந்தனையுடன் இருக்கும் சம்சாரமே - சுகமய, சௌபாக்ய சம்சாரம். சொல்லும் ஹரிநாமமே அமிர்தம். இத்தகைய சிந்தனை உள்ளவனை ஸ்ரீஹரி காப்பாற்றுவான்.

அதற்காக இறுதியில் புரந்தரவிட்டலனை, கைபிடித்து காப்பாற்றுவாய் என்று கேட்கிறார். தாசரின் இந்த சிந்தனையை அனைத்து சஜ்ஜனர்களும் பின்பற்றவேண்டும். இத்தகைய சம்சாரம் என்னும் பாக்கியம் அனைவருக்கும் கிடைக்கட்டும். வாழ்க்கை ஒளிரட்டும்.

**ஆஷாட பௌர்ணமி**

**வெறுக்கும் வாழ்க்கை**

பஞ்சபூத சரீரமுள்ள ஜீவன், ஜடமான உலகில் கிடைத்த ரூபத்தினால், பிறப்பு இறப்பு சுழற்சியின் பிரவாகமாகப் பாய்வதே இந்த சம்சாரம் / வாழ்க்கை. யாரும் இதிலிருந்து தப்பியதில்லை. அவரவர்களின் செயல்களுக்கேற்ப ஸ்ரீஹரி இந்த சம்சார சக்கரத்தில் அவர்களை சிக்கவைக்கிறான். இதற்கே ஸ்ரீவியாசராஜர்: ‘சம்சாரவெம்ப மாரிகெ சிலுகிதெ’ -- என்றார். விஜயதாசர், வாழ்க்கையில் ஜீவனின் பிரச்னை என்னவென்று விளக்குகிறார்.

பிந்து மாத்ரவோ சுகவு துக்க பர்வததஷ்டு
சந்தேஹவில்லவிது சாஸ்திரசித்த ||

ஸ்ரீவிஷ்ணுதீர்த்தர் - ‘தேஹதாராகாராதிஷு சங்கோஹி சம்சார:’ - இந்த தேகம் வீடு மனைவி மக்கள் செல்வம் ஆகியவற்றில்

வைத்திருக்கும் பாசமே சம்சாரம் என்பது. இந்த பாசத்தினால், மனதில் காமம் முதலானவை பிறந்து, செய்யக்கூடாதவற்றை செய்து, பிரச்னைகளை உருவாக்குகிறது. அதற்கே ஸ்ரீவாதிராஜர் 'பிட்டு பன்னிரோ சம்சாரத ஹம்பல' என்றார்.

ஸ்ரீபுரந்தரதாசரின் உதாரணம் இப்படி இருக்கிறது:
ஹேசிகெ சம்சாரதலி ஆஷெலேஷ மாடத்ஹாங்கெ
ஈசபேகு இத்து ஜெயிஸபேகு ||

ஸ்ரீராகவேந்திர ஸ்தோத்திரத்தில் இந்த சம்சாரத்தைப் பற்றிய ஒரு விளக்கம் வந்திருக்கிறது.

சம்சாரே க்ஷயசாகரெ ப்ரக்ருதிதோ காதே சதா துஸ்தரே
சர்வாவத்ய ஜலக்ரஹைறனுபமே காமாதி பங்காகுலே |
நானா விப்ரம துப்ரம அமிதபயஸ் தோமாதி பேனோத்கடே
துக்கோத் கிருஷ்ட விசே சமுத்ர குரோ மாமக்ன ரூபம் சதா ||

குருவே! ஆழமான, துக்கம் எனப்படும் இந்த முதலைகள் நிறைந்த கடலில், ஆசை என்னும் அலைகளினால் உந்தப்பட்டு, தவறான ஞானத்தைப் பெற்று, சுழிகள் உள்ள இந்த பயங்கரமான சம்சாரத்தில் மூழ்கியிருக்கிறேன். இத்தகைய சம்சாரத்தைக் கண்ட ஸ்ரீபாதராஜர் 'அகடகட சம்சாரவனு நிச்செ நீ கெடபேட' என்றார். இதற்கே புரந்தரதாசர் 'சம்சார பலு கொட்ட அதரொளு பித்திட்ட கால்கட்ட' என்று சொன்னது, அனைவரின் அனுபவமாகவும் இருக்கிறது. சுகம் துக்கம் சேர்ந்த இந்த வாழ்க்கையில் வந்த ஜீவனைப் பற்றி புரந்தரதாசர் சொன்னது:

பண்டனாதேனு நானு சம்சாரதி | சாகின்னு சம்சார சுகவு ||

ஸ்ரீகனகதாசர் சம்சாரம், அதாவது நம் வாழ்க்கையைப் பற்றி கொடுக்கும் விவரம்:
காளிகொட்டித சொடரு ஈ சம்சாரதேளிகெயு ||
இன்னொரு இடத்தில் இவரே சொன்னது:
நீர மேலிண குள்ளேயந்ததி | தோரியடகுவ தேஹவே சம்
சார பஹுளார்ணவதொளு முளுகிதேனு பதிகரிஸி ||

வாழ்க்கையே ஒரு சிறு நாடகம். பிறந்தவன் இறப்பது உறுதி. அது எப்போது என்பது யாருக்கும் தெரியாது. அதற்கே புரந்தரர் கூறியது -- 'தாளி பாரத முன்ன தர்மவ களிஸிரோ' என்று. இதற்கு கனகதாசர் தனது ஹரிபக்திசாரத்தில் அளித்த பதில் இது.

மொதலு ஜனனவனரியே மரணித ஹதன கடெயலி திளியெ நானு
மத்யந்தலி நெரெ நிபுணனெம்புது பளிக நகெகெடு |
மொதலுகடெ மத்யகள பல்லவ |மதனஜனகனு நீனு நின்னய
பதயுகவ பயசுவேனு ரக்ஷிஸு நம்மனனவரத ||

பிறந்து வந்த ஜீவனுக்கு கர்ப்பவாசத்தின் துக்கம் தெரிவதில்லை. இறப்பு நம் கையில் இல்லை. இது உண்மை. இது இரண்டிற்கும் நடுவிலான வாழ்க்கை சுகதுக்கங்களின் கலவை. இப்படியிருக்கும்போது, வாழ்க்கையை தெய்வ, குரு, பெரியவர்களின் வழிகாட்டுதலில் நடத்தினால், பிறகு சிறிது நிம்மதி கிடைக்கும். சத்கர்ம, துஷ்கர்மங்களின் வித்தியாசத்தை அறிந்தால் மட்டுமே, வாழ்க்கைப் பயனை அறியமுடியும். இதற்காகவே கனகதாசர் ஆறுதல் வார்த்தைகளை நமக்காக அளித்தார். ஸ்ரீஹரியே கதி என்று நம்பி, அவனது மகிமைகளை அறிந்தால், கருணை செய்து காப்பாற்றுவான். இதையே தாசர் 'ரக்ஷிஸு நம்மனனவரத' என்றார்.

சம்சாரத்தை கடல் என்று சொல்வர். காரணம் இதன் நீள, அகல, ஆழம் நமக்குத் தெரியாது. இதன் ரகசியம் தெரியாது. நடுவில் சிக்கிக்கொள்ளும் நம்மை படகில் காப்பாற்றி கரைக்குக் கொண்டு வருபவர், ஸ்ரீஹரி. 'அம்பிகா நா நின்ன நம்பிதே' என்று பாடி, வேண்டி அவனிடம் முறையிட வேண்டும்.

**ஆஷாட பகுள ப்ரதமை**

**ஹரி நாமம் ஒன்றே போதுமே**

ஹரி நாமத்தின் மகிமைகளை தாசர்கள் பெருமையுடன் உரைத்த விதம் இப்படியாக இருக்கிறது. 'நாமமொந்து நெனெயெ விஜய விட்டலன தாமவெ' என்று ஹரி நாமத்திற்கு மேல் வேறொன்றும் இல்லை என்பர் தாசர். ஸ்ரீவாதிராஜர் 'ஹரிஹரவ நெனவங்கெ

நரகத பயவில்ல' என்றால், புரந்தரதாசர் 'நாராயணனெம்ப நாமவ நேமதி நெனவுதிரெச்சரிகெ' என்றால், விஜயதாசரோ:

ஹரிநாம ஹரிநாம துரிதராசி பீம
ஹரிநாம பொந்தக்கெ அனந்த பகெ கர்ம
சரிபாரவு காணே இதக்கெ சம்ஷய சல்ல
ஹரிநாம தொரெது கர்மமாடலு தோஷ
கரகது கரகது மெட்டெ போகது
ஹரிநாமதல்லி ப்ரீதியிட்டு கர்மவ
தெரெயெ பாபவில்ல பலவக்கு சுர
குரு விஜயவிட்டலரேய நாம
ஸ்மரிஸித மனுஜரிகெ ஸ்மரவென்னி ஞானபக்தி ||

ஸ்ரீமதாசார்யர் 'ஹரிரேவ பரோ ஹரிரேவ குரு: ஹரிரேவ ஜகத் பித்ருமாத்ரு கதி:' என்று ஆணையிட்டது, அனைத்து ஹரிதாச பரம்பரைக்கு மூல மந்திரமாக இருக்கிறது. ஹரி நாமஸ்மரணையினால் நல்லவை நடந்து, கெட்டவை அழிகின்றன. எந்தவொரு நற்காரியத்தை செய்யத் தொடங்கும்போதும் 'ஹரி: ஓம்' என்று சொல்லியே துவக்குவது வழிவழியாக வந்த சம்பிரதாயம். அதற்கே தாசர் 'ஹரிநாம தொரெது கர்ம மாடலு தோஷ' என்று தெரிவித்தார். ராஜரும் 'ஸ்ரீஹரிய நாமவொந்தே சாலதே' என்று புகழ்ந்தார். ஏனென்றால், நம்மை வாழ்க்கையில் முன்னேற்றுவது ஹரி நாமம் ஒன்றே.

ஆரு சங்கட பாஹோரில்ல சிரி
நாராயணன ஸ்மரண் நெரெ பாஹோதல்லதெ || - ஸ்ரீ கனகதாசர்

ஹரிஸ்மரணெயில்லதெ பாளி பதுகிதரேனு |
நரஜன்மதல்லி ஜனிஸி பலவேனு ஹரியே || -- ஸ்ரீபுரந்தரதாசர்

**ஆஷாட பகுள த்விதியை**
**பஜித்து சுகத்தை அடையவும்**

மனிதனுக்கு உண்மை, பொய் ஆகியவற்றை அறியும் தன்மை அவசியம். இங்கு வாழ்க்கையை நடத்தவும், வேறு உலகத்தில்

சுகமாக இருக்கவும் இது தேவையான சாதனை. இது மிகவும் கஷ்டமானது. இதை அறியாமல், வேறு எதை செய்தாலும் அது வீணே என்றார் தாசர்.

பிடதெ மத மத்ஸராஹங்காரதலி முளுகி
ஒடனெ பெரளுகளெணிஸி மௌனதிந்த ।
தடெயதலெ பரலோக சூரெகொம்புவனெம்பே
பள பகனு மாடித அபராதவேனய்யா ॥ -- ஸ்ரீபுரந்தரதாசர்

துர்ஜனர்கள் பேச்சு ஒன்று, நடவடிக்கை ஒன்று என்று இருப்பர். இது ஏனென்றால், மனதில் கர்வம், பொறாமை ஆகியவை நிரம்பியிருக்கும். அப்போது வெளியில் டாம்பீகமாக இருப்பர். வெளியில் மற்றவர்களுக்கு பிரமை உண்டாவதற்கு ஜபம், தபம் ஆகியன செய்தும், உள்ளே மனதில் அழுக்கு நிரம்பியிருக்கும். இதற்கான உதாரணம் கொக்கு. கொக்கு ஒரு காலில் நின்றவாறு தியானம் செய்வதைப் போல இருந்தாலும், அதன் மனம் முழுக்க மீனின் மேல் இருக்கும்.

தாசர்கள் அறிவுறுத்துவது நம்முள் அகத்தூய்மை இருக்கவேண்டும் என்று. அப்போது மட்டுமே செய்யும் அனைத்து நற்செயல்களும் நற்பலன்களைத் தரும். இப்படி தாசரின் இன்னொரு பாடலில்:

பரசரி பரதனவு பரனிந்தெ பரஹிம்ஸெ
பரம பாதகத காரணவெந்து திளிது ।
தரெகதிக புரந்தரவிட்டலன சரணவனு
நெரெபஜிஸி சுகியாகி பாளில்லவோ மனுஜ ॥ --ஸ்ரீபுரந்தரதாசர்

மிகவும் கொடூரமான தவறுகள் எவை என்பதை கோடிட்டுக் காட்டுகிறார். பிறமனை, பிறரின் செல்வத்தின் மேல் ஆசைப்படுவது ஆகியன. 'பாபாய பரபீடனம்' என்று எப்போதும் பர (மற்ற) பொருட்களின் மேல் ஆசை வைப்பதைவிட்டு, 'பர' எனப்படும் பரமாத்மாவில் மனம் வை என்றார். இறுதியில் நிரந்தரமான சுகத்தைப் பெறுவதற்கு அவனையே பஜிக்கவும் என்று கூறுகிறார் தாசர்.

***

**ஆஷாட பகுள த்ருதியை**
**அறிந்து நடக்கவும்**

சுக துக்கங்களின் சங்கமமே வாழ்க்கை. பொதுவாக சுகம் வந்தால், அது என்னுடைய முயற்சி எனவும், துக்கம் வந்தால் இறைவனின் வேலை என்று சொல்வது வழக்கம். இது சரியல்ல. அனைத்தும் நம் கர்மங்களைப் பொறுத்தே நடக்கின்றன. இதற்காகவே தாசர் ‘சுகவாகலி பஹு துக்கவாகலி, சக நீனாகிரு பாண்டுரங்கா’ என்றார். இப்படி எந்த வேலைக்கும் நம் நிலை இப்படியிருக்க வேண்டுமென்று ஸ்ரீவிஜயதாசர் --

லேசாதரு ஹரிய காருண்யவெனபேகு
லேசாகதெ பலு மோசதலி
க்லேஷ பந்தடரலு ஏசு ஜன்மத பாப
ராஷியெ பலிசிதோ என்ன கர்ம
ஈ ஷரீரக்கெ பந்து ப்ராப்தவாதத்து அனுப
விசதெ பிடது சித்தவெந்து
லேஷவாதரு துக்க ஹச்சிகொள்ளதெ மஹா
தோஷதல்லிபேகு நோயதரெ
ஸ்ரீஷனே கதி எந்து பேசரதலெ பந்த
க்லேஷகளுணபேகு பந்தாகனு
தேஷகாலகுண பரிபூர்ண ஹரி இரெ
காஸி எல்லிதெ எந்து நலியபேகு
ஸ்ரீசதி கால தேவ ஜீவ ப்ரளயதல்லி
நாஷவாகவு பேட அனலிபேகு
வியாஸ வசனகெ மத்வராயரு மாடித
பாஷ்ய சன்மதியிந்த நோடபேகு
வாசுதேவ நம்ம விஜயவிட்டலன்ன
தாசானுதாசர தாசனாகலிபேகு || -- ஸ்ரீவிஜயதாசர்

நல்லவை ஸ்ரீஹரியின் கருணையாலும், பிரச்னைகள் என் வினைப்பயனாலும் என எப்போதும் நினைக்க வேண்டும். இதுவே தத்வம். தாசர் ‘ஹரி இரெ காஸி எல்லிதெ’ என்று சொன்னதில் நம்பிக்கை இருக்கட்டும். ஸ்ரீமதாசாரயர் அவதரித்து வந்து ஜீவ

ஈஸ்வர பேதம் மற்றும் பிற தத்வங்களை தமது பாஷ்யங்களில் நிரூபித்தார். இதுவே ஹரிதாசர்களின் மூல ஆதாரம். சஜ்ஜனர்களின் வளர்ச்சிக்கு (உத்தார) வழிகாட்டியாக இருக்கிறது. ஸ்ரீஹரியே கதி என்று நம்பி, இன்ப துன்பங்களை அனுபவித்து 'க்லேஷானந்தகளீசாதீன' என நினைக்க வேண்டும். இதையே உண்மை என்று அறிந்து அதன்படி நடக்கவேண்டும்.

**ஆஷாட பகுள சதுர்த்தி**

**வீணாக வேண்டாம்**

வாழ்க்கையை பயனுள்ள முறையில் கழிக்க வேண்டுமெனில் என்ன செய்யவேண்டும் என்பதை, பிராணேச தாசர் ஒரு பட்டியலிட்டு தருகிறார். சாதனைக்கு கிடைக்கும் பலன், அதை எப்படி செய்கிறோம் என்பதை பொறுத்ததே.

வனஹீனவாத நதிகளு வ்யர்த்த
தனஹீனவாத சாஹுகார வ்யர்த்த
தனுஜரு இல்லத மந்திர வ்யர்த்த
ஹண விஷ்ணு த்ரோஹிகெ கொட்டத்து வ்யர்த்த
குணஹீன சன்யாசிகெ வந்தனெ வ்யர்த்த
கன கர்ஜிஸிதரேனு மளெ இல்ல வ்யர்த்த
அனளனு தூமயுக்தவாகி வ்யர்த்த
அனிமிஷரிகெ மந்த்ரஹீனாஹுதியு வ்யர்த்த
வனிதெகெ கண்ட அந்தரிசலு வ்யர்த்த
மனெதன தளியனாகுவுதந்து பலு வ்யர்த்த
வனஜரஹிதவாத காசாரவு வ்யர்த்த
அனுவாகத மதஹீனகஜவாதரு வ்யர்த்த
குணியத ஸ்வரஹீன மேதபாட வ்யர்த்த
த்ருணகண்டகயுக்த மார்கவாதரு வ்யர்த்த
மனஸு சமஹீனவாத ஞான வ்யர்த்த
கனசு காஸெம்புது சுள்ளு க்யாதி வ்யர்த்த
ஒணடம்பகவாத தான தர்ம வ்யர்த்த
மனஸிஜபித ஸ்ரீப்ராணேஷ விட்டலனங்க்ரி
யனு சேவிசதெ பந்த மனுஜ ஜனும வ்யர்த்த ॥ -- ஸ்ரீபிராணேசதாசர்

பல கோடி ஜென்மங்களுக்குப் பிறகு நமக்குக் கிடைத்த பேறு இந்த மனிதப் பிறவி. அதிலும் ஸ்ரீமதாசார்யரின் வழியில் வந்தவராகப் பிறந்தது மகாபாக்கியம். இத்தகைய சிறப்பான பிறவி கிடைத்தபோது, நாம் எவ்வித துஷ்கர்மங்களையும் செய்யாமல், இருக்க, தாசர் பல்வேறு விஷயங்களை சொல்கிறார். வாழ்க்கையின் ஒவ்வொரு நிலையிலும் கவனமாக, நற்செயல்களை செய்து பலன்களைப் பெறுங்கள் என்றார். வ்யர்த்த என்றால் நிரந்தரமாக நீங்கியது என்றே பொருள். மறுபடி வராது. கிடைக்காது. ஆகையால் எப்போதும் நம் செயல்கள் வீணாகாமல் கவனமாக இருங்கள் என்று ஆணையிடுகிறார்.

**ஆஷாட பகுள பஞ்சமி**

**ஸ்ரீஜயதீர்த்தர் ஆராதனை**

மித்யா சித்தாந்த துர்வாந்த வித்வம்ஸன விசக்ஷண:
ஜயதீர்த்தாக்ய தரணி: பாஸதாம் நோ ஹ்ருதம்பரே ||

மாத்வ பரம்பரயில் ஸ்ரீமதாசார்யருக்குப் பிறகு ஒரு முக்கிய இடத்தை ஸ்ரீஜயதீர்த்தருக்கு கொடுத்து கௌரவித்திருக்கின்றனர். இதற்கு ஆதாரம் என்றால்:

ஸ்ரீமத்வ: கல்பவ்ருக்ஷஸ்து ஜயார்யா: காமது:ஸ்ம்ருத: || -- ஸ்ரீமுஷ்ணமஹாத்ம்ய

ஸ்ரீவியாசராஜர், ஸ்ரீஜயதீர்த்தரை மிகுந்த மரியாதையுடன் புகழ்ந்திருப்பது:

வர்ணிஸலளவே குணசாந்த்ரன |
கர்ணஜனக கோடி தேஜ
ஸ்ரீஷஜபஜக ஜயமுனீந்த்ரன ||

மத்வ சாஸ்திர துக்த நிதிய |புத்தியெம்ப மந்தரகிரிய |
ஷுத்த சூத்ரநேத்ரதிந்த |பத்தவமாடி பிடிது கடெது |
ஷுத்த யுகுதி சுதெய தெகெதன |சிஷ்யஜனகெ
ஷ்ரத்தெயிந்தலதனு எரெதன |க்ரோததிந்த
க்ருத்தவாதி தைத்யர கெலிதன |ஜயமுனீந்த்ரன ||

ஸ்ரீவிஜயதாசர், ஸ்ரீஜயதீர்த்தரை புகழ்ந்து பாடியிருப்பதாவது:

சாரி பஜிஸிரோ டீகாராய ரங்க்ரிய |
கோரபாதகம்புதிய தூதமாள்பன ||
ஜயெந்து நுடியலு ஜயஷீலனாகுவ
ய எந்து நுடியலு யமனஞ்சுவ
தீ எந்து நுடிதரெ திமிரபாதக ஹானி
ர்த்த எந்து நுடிதரெ தாபத்ரய பரிஹார ||

வியாச தாச சாகித்யத்தில், ஸ்ரீடீகாராயரை போற்றிப் புகழாதவர்கள் யாருமில்லை. ஸ்ரீமதாசார்யரின் கிரந்தங்களுக்கு டீகை, வியாக்யான எழுதுவதற்கென்றே அவதாரம் எடுத்து வந்த மகாத்மா் இவா். ஆசார்யரின் அனுவியாக்யானத்திற்கு விரிவாக எழுதிய உத்தம கிரந்தம் - ஸ்ரீமன் நியாயசுதா. மொத்தம் எழுதிய கிரந்தங்கள் 18 டீகா மற்றும் 3 ஸ்வதந்த்ர கிரந்தங்கள். கன்னடத்தில் கிருதிகள் இயற்றியிருக்கிறார் எனத் தெரிகிறது. அன்றிலிருந்து இன்றுவரை 'சர்வமான்ய டீகாகாரர்' என்று பரம்பரை இவரை புகழ்கிறது. ஸ்ரீவித்யாதிராஜருக்கு பீடம் அளித்து, மலகேட'வில் பிருந்தாவனஸ்தராகி, நம்பிய பக்தர்களுக்கு அருளி வருகிறார்.

**ஆஷாட பகுள சஷ்டி**

**கர்வத்தை தரக்கூடியவை**

ஒரு மனிதனுக்கு கர்வம் எந்த சந்தர்ப்பத்தில் எந்த சூழ்நிலையில் வருகிறது என்பதை ஒரு பட்டியல் போட்டுக் காட்டியிருக்கின்றனர் தாசர்கள். பகவந்தனை மறந்தால் அறியாமை வந்து அதுவே கர்வத்திற்கு எப்படி காரணம் ஆகின்றதென்றும் தெரியப்படுத்துகின்றனர்.

அன்னமத அர்தேமத அகிள வைபவத மத
முன்ன ப்ராயத மதவு ரூபமதவு
தன்ன சத்வத மத தாத்ரிவஷவாத மத
இன்னு தனகெதுரில்லவெம்ப மததிந்தா || -- ஸ்ரீபுரந்தரதாசர்

இன்னொரு இடத்தில்,
சிரி மான பந்தாக பிரிபிரி நடெவரு

நடெயலாரனெந்து மிடுகுவரு |
ஒடவெ மஸ்தகளிட்டு பிடிவார படுவரு
சடகரதிந்தலி நடெயுவரு
வ்யாபார பந்தாக ஈபரியாள்பரு ||

செல்வம், மான, மரியாதை, புகழ், பதவி ஆகியவை வரும்போஒது ஒரு மனிதனுக்கு கர்வம் உண்டாகிறது என்பதை அறிகிறோம். இத்தகையவர்களுக்கு பெரியவர், குரு, விதிகள் என அனைத்தும் மறந்துபோகின்றன. இதற்கு தாசரின் எச்சரிக்கை:

கொப்பலிரபேகு மனுஜ நீனு, கொப்பலிரபேகு ||

ஏனென்றால், இந்த செல்வம், மானம், மரியாதை என எதுவுமே நிலையானது அல்ல.

சிரி ஹோத மருதின படதன பந்தரெ
ஹுருகு ஹத்தியந்தெ கெரகொம்பரய்யா || -- ஸ்ரீபுரந்தரதாசர்

சாதாரணமாக இந்த கர்வம், தலைக்கனம் இவற்றிற்கு இரு காரணங்கள். நமது தவறான ஞானம் மற்றும் ஸ்ரீஹரியை மறந்தது. உடன் நானே அனைத்தையும் செய்கிறேன் என்னும் கர்த்ருத்வ - தவறான ஞானமே. இதற்காகவே தாசர் எச்சரிக்கிறார்:

எச்சரிகே, பாக்ய யாரிகு ஸ்திரவல்ல நிச்சயவெச்சரிகெ |

## ஆஷாட பகுள சப்தமி
## ஸஜ்ஜனர்களின் விரோதிகள்

பல ஜாடி தண்ட மித்யாஞான துர்விஷய
குலசதிய கூட கலஹ
களவு கடிணோக்தி துஷ்டான்ன போஜன மதுவெ
கள முகித பாபசிந்தெ
ஹளிவ ஹரிவாஸர வ்ரத பங்கதிந்த நானாகி
சுலப ஹயவதனனு மரெத்ஹாளு ஹரடெயவ
நின்னதாஸனு நானு எந்தாஹனய்ய
அனந்த அபராதகாகராததனு || -- ஸ்ரீவாதிராஜர்

ஹரிதாசர் ஆவதற்குத் தேவையான லட்சணங்கள் தாச சாகித்யத்தில் பலவேறு இடங்களில் விளக்கியிருக்கிறார்கள். ஹரிதாசராக இல்லாதவர்கள் செய்யக்கூடியதாக பல செயல்களை இங்கு சொல்லும் ராஜர், சஜ்ஜனர்கள் இவற்றை என்றைக்கும் செய்யக்கூடாது என்று எச்சரிக்கிறார். காரணம், தவறான செயல்கள், சாதனைக்கு தடையாகும். மேலும் அவை அதம-லோகத்திற்கு நம்மை தள்ளி துர்கதியையே தருகின்றன. ஆகையால் இந்த கெட்ட செயல்கள் என்றைக்கும் பின்பற்றக்கூடாதவை என்று அறியவேண்டும்.

அந்தப் பட்டியலில் இருப்பவை நமது சாதனைக்கு தடையாகும். ஒவ்வொன்றும் சமூகம் / குடும்பத்தை உடைக்கும் வலிமை பெற்றவை. ஆகவே இவற்றை விலக்குமாறு ஹயவதனனை வேண்டுகிறார்.

நின்ன த்யானத பக்தி கொடு
அன்யரலி விரக்தி கொடு
நின்ன நோடுவ யுக்தி கொடு
நின்ன பாடுவ பக்தி கொடு
நின்னலி பவ சம்பத்திய கொடு
உன்மத்தர ஜனர அத்தித்வ நூகுவ
சித்ததத்வ க்ருத்யவ கொடு
எத்தெ துதியலி எனகெ முக்திய கொடு
அத்தத்த மாடு பவகத்தலெ எனகெ முத்திதெ ஹயவதன || -- ஸ்ரீவாதிராஜர்

**ஆஷாட பகுள அஷ்டமி**
**காப்பாற்றுவாய் ஸ்ரீகிருஷ்ணா**

இந்திகெந்தோ நாளெகெந்தோ நாடத்திகெந்தெந்து
பெந்த உடல ஹொரியெ ஹேயிது சம்சார
ஹிந்தெ நானா யோனியல்லி பெந்தேனெம்ப அரிகெயில்ல
முந்தே முக்தனாகபேகெந்து எணிகெயில்ல
கொந்தல தாபத்ரயதந்துக க்கொளகாகி
பெந்து மூர்க்கரொடனாடி நா நொந்தேனய்யா

இந்திரியங்களு தம்ம தம்ம தெரெகளிகெ
பந்திஸி பளலிஸி என்ன காடுதலிவெ
பெந்தெனெந்தரெ பரலேயவோ என்னனு
நந்தன கந்த கிருஷ்ண விசாரிஸி காயய்யா || -- ஸ்ரீவியாசராஜர்

பகவந்தனை நினைத்தால் வரக்கூடிய பலனை ஸ்ரீவியாசராஜர் கூறுகிறார்.

கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண எந்து மூரு பாரு நெனெயிரோ
சந்துஷ்டனாகி முகுதி கொட்டு மிக்க பாரி ஹொரெவனொ || -- ஸ்ரீ வியாசராஜர்

பகவந்தனை நினைத்தால், நமக்குக் கேட்கத் தோன்றாத, தெரியாதவற்றையும் அவனே அறிந்து கொடுப்பான். இங்கு வியாசராஜர் நமக்கு தெரியாததென்று சில உதாரணங்களைக் கொடுக்கிறார். அதாவது, என் பிரச்னைகள் இதுவே. நீயாக அவற்றை அறிந்து, என்னை காப்பாற்ற வேண்டும் என்று கேட்பதை நாமும் அறியவேண்டும்.

இங்கு வியாசராஜர், பிறந்து வந்திருக்கும் ஒரு மனிதனின் அன்றாட பிரச்னைகளை நம் கண்முன் வைக்கிறார். சென்றது ஒரு பிரச்னை என்றால், வரப்போவது வேறொரு வகை. இப்படியாக வாழ்க்கை செல்கிறது. இதற்கு கடைசி என்பதே இல்லையென்று நொந்தேன் என்கிறார். ஆதிபௌதிக, ஆதிதெய்விக, ஆத்யாத்மிக ஆகிய பிரச்னைகளால் முக்தி கிடைக்க, குழப்பமான மனதிலிருந்து மற்றும் இந்திரியங்களிலிருந்து வெளிவருவதற்கும் இது வழிகாட்டியாக இருக்கிறது என்றார். ராஜர் நம் நிலையையே வெளிப்படுத்தி, யதார்த்தத்தை நம்முன் இடுகிறார். இறுதியில் ‘அன்யதா சரணம் நாஸ்தி, த்வமேவ சரணம் மம’ என்று ஸ்ரீஹரியையே சரணடைந்து, அவன் நம்மை கண்டிப்பாகக் காப்பான் என்று நம்பிக்கையைக் கொடுக்கிறார்.

**ஆஷாட பகுள நவமி**

**மாயாவாத கண்டனம்**

ஸ்ரீஜகன்னாததாசர் அன்றைய சமஸ்கிருத பண்டிதர்களால் போற்றப்பட்ட நிலையில் இருந்தவர். சமஸ்கிருத & கன்னட மொழிகளில் வல்லுனர். மத்வ சித்தாந்தத்தின் தத்வங்களை எளிமைப்படுத்தி, பேசுமொழியில் ஹரிகதாம்ருதசாரம் என்னும் சிறந்த கிரந்தத்தை, பற்பல கிருதிகள், சுளாதிகளை இயற்றிக் கொடுத்த மகானுபாவர். இவர் மாயாவாதத்தை தனது யுக்திகளால் கண்டிப்பது மிகவும் அருமையாக இருக்கிறது.

எல்லா ஒந்தே எம்ப சொல்லு கரெயந்தெனலு
சுள்ளு எம்போது கரேயாகி |கரெயாகி மாதுகளு
சுள்ளென்னரேனோ சுஜனரு ||

--நின்ன நா பெய்தரே என்ன நீ பையலு நிர்மூலவாயிது அத்வைத |
--சுத்தபிரம்மன சுகுண கத்த ப்ரயுக்த ப்ரஸித்தசோரத்ன நின்னல்லி |
--மாயாவாத மதவு ஹேயவெம்புது சித்த தாயிதந்தெகளு சதிபுத்ர |

சத்யவெந்தரெ கரெயு மித்யெ எந்தரெ சுள்ளு
சத்ய மித்யெகளு ஏகத்ர |ஏகத்ர இஹுதெ உ
ன்மத்த ஈ மாது நிஜவில்ல ||

--ஜீவேஷரொந்தெந்து ஈ மாகு கேள்வரிகெ கேவலாஷ்ரவ்யவெந்தெந்து |

த்வாசுபர்ணா எம்ப ஈ ஸ்ருதிகளல்லி வி
ஷ்வாஸ மாடதலெ ஜீவேஷ |ஜீவேஷ ரைக்யோப
தேஷ மாடிதவ சண்டால ||

அஜராமரண ப்ரம்மபுஜகபூஷண பூஜ்ய
த்ரிஜகதேவேஷ ஹரியித்த |ஹரியித்த நீனித்த
அஜகஜன்யாய புசியல்ல ||

--குணபூர்ண சர்வக்ஞ அணுமஹத்கதன நிர்குண அக்ஞ அல்பனெனுதித்தே |
--ஈஷத்வவெம்புது ஸ்ரீஷகல்லதெ ஜீவராசிகளிகுண்டே ஈ சக்தி |
--சிவனு நீனாதரெ சிவராணி நினகேனு |அவிவேகி மனுஜ

ஈஷ நானெனலு கீனாஷனிந்தலி தணிப
தாஸனெம்புவகெ தயதிந்த |தயதிந்த தனயா
வாஸதொளகிட்டு சலஹுவ ||

மாத்ருபித்ரு த்ரோஹி ப்ராத்ருசககுருபந்து
காதகனு நீனு புஸியல்ல |புஸியல்ல ஸ்ரீஜக
ந்னாதவிட்டலனே நானெம்பே || -- ஸ்ரீஜகன்னாததாசர்

**ஆஷாட பகுள தசமி**

**கலியுகத்தின் விளையாட்டுகள்**

ஒரு மனிதனின் சாதனைக்கு தேச, கால, குடும்பம், நட்பு, மனது, அதிகாரம், பின்புலம் என பல்வேறு காரணங்கள் இருந்து அந்த சாதனையை செய்விக்கின்றன அல்லது நிறுத்துகின்றன. கலியுகத்தில் நான்கில் ஒரு பாகம் தர்மத்திற்கென இடம் இருக்கிறது. ஸ்ரீஹரியின் விருப்பப்படியே கலிக்கு புகழ். அதாவது அதர்மம், அநீதி, அனாசாரம் ஆகியவை வளர்கின்றன. 'கலிர்யேகோ மஹான்குண:' என்கின்றனர். ஹரிதாசர்கள்:

--கலியுகதலி ஹரி நாமவ நெனெதரெ கைகொடுவனு ஸ்ரீரங்கவிட்டலா | --ஸ்ரீபாதராஜர்
-கலியுககெ சமயுகவில்லவய்ய | - ஸ்ரீபுரந்தரதாசர்

இப்படியெல்லாம் தாசர்கள் பாடினாலும், கலியின் நடவடிக்கை, செயல்களை வர்ணித்து, எச்சரிக்கை மணியை அனைவருக்காகவும் அடித்தனர். சிலவற்றைப் பார்ப்போம். புரந்தரதாசர் 'கலியுகத மஹிமெ காணபந்திதெ ஈக' என்றால், கனகதாசர் 'சத்ய தர்மகளெல்லா எத்த போதவோ காணே' என்கிறார். கோபாலதாசர் --

ஈ கலியுகதலி நின்ன பகுதருகளு |யேகெ தேஷதி ஸ்வச்பரு |

நா காணுவேனு அசுர ஜனரெ பஹளவாகி ॥ என்றார்.

புரந்தரதாசர் -- தர்மக்கெ கைபாரதே கால பாப
கர்மக்கே மன பாஹுதே கலி கால ॥

ஹரிகதெயனு பிட்டு ஹீன நுடி நுடியுவரு
குருஹிரியர தோஷிஸலு எணிசுதிஹனு
பொரெத தாய்தந்தெயர மாதுகள மன்னிஸதெ
தருணியர நுடி கேளலிச்சிசுதிஹரு ॥

கொட்ட சாலவ நுங்கி கொல்ல பருதிஹரு ।
முட்டி பாஷெய கொட்டு மோசவனெ மாடுவரு ।
உண்ட மனெகெரடன்னு பகெயுத்தலிஹரு ।
கள்ளரொளு அதி ஸ்னேஹ சுள்ளரொளு ஸோலுவரு ।
மாடிதுபகாரவனு மரெது கொம்பரு ।

ஜகன்னாததாசர் -- குஹகயுக்தியிந்த லோகஹிதரன்னு நிந்திசுவவனு ।
ஹரிகதாம்ருதவனு பிட்டு நரசரிதெயனு பொகளி ।

**ஆஷாட பகுள ஏகாதசி**

**அனைத்தும் நீயே ஸ்வாமி**

பந்துகளு எனகில்ல பதுகினலி சுகவில்ல
நிந்தயலி நொந்தெனெய்ய நீரஜாக்ஷ ।
தந்தெதாயியு நீனே பந்துபளகவு நீனே
எந்தெந்திகு நின்ன நம்பிஹெனு கிருஷ்ணா ॥ -- ஸ்ரீபுரந்தரதாசர்

பற்பல பிறவிகளைத் தாண்டி வந்த மனிதன், இறக்கும் முன்னர் நடந்த அனைத்தையும் நினைவுபடுத்தி பேசும் சொற்கள் இவையே. இது அனுபவத்தின் பேச்சுகள். ஏனெனில், பிறந்து வந்த ஜீவி தன் வாழ்க்கையில் அனைத்தும், அனைவரும் இருந்தும் நிம்மதி, அமைதியைக் காணாமல் பரிதவிக்கிறான். ‘யாரு சங்கட பாஹோரில்லா’ என்ற அனுபவமே இது. அப்போது மனதில் இருப்பது:

த்வமே மாதா ச பிதா த்வமேவ த்வமேவ பந்துஸ்ச சகா த்வமேவ |
த்வமேவ வித்யா த்ரவிணம் த்வமேவ த்வமேவ சர்வம் மம தேவதேவா ||

ஸ்ரீஹரியைத் தவிர மற்ற அனைவரும் அ-ஸ்வதந்திரரே. துக்கம் உடையவர்களே. இப்படியிருக்கும்போது யாரை நம்பினால் துக்கங்களைக் களைந்து நிம்மதி பெறுவேன் என்னும் சிந்தனை வரும்போது, சரியான வழி கிடைக்கிறது.

தாசரின் இந்த வாக்கினை மனதில் இருத்த வேண்டும். அவனே என் கதி. ஸ்ரீமதாசார்யர் 'ஹரிரேவ பித்ருமாத்ருகதி:' என்றது நினைவில் வரவேண்டும். அவனை நம்பினால், ' ந மே பக்த: ப்ரணஷ்யதி' என்று கிருஷ்ணன் சொன்னது நிஜமாகிறது. பல ஜீவர்கள் அவனையே சர்வாத்மன் என்று அறிந்து சத்கதி பெற்றிருக்கின்றனர் என்று இதிகாசங்களிலிருந்து அறிகிறோம். அதற்கே தாசர் 'முக்திதாயக தேவ' என்று அவனை அழைக்கிறார்.

பக்தவத்ஸலனெம்போ பிருது பொத்தமேலே
பக்தராதீனனாகிரபேடவே
முக்திதாயக தேவ புரந்தரவிட்டலனெ
ஷக்த நீனஹுதெந்து நம்பிதேனோ கிருஷ்ணா || -- ஸ்ரீபுரந்தரதாசர்

சர்வாத்மனான ஸ்ரீகிருஷ்ணனை நம்பினால் அனைத்தையும் கொடுப்பான். ஒரே தெய்வம் இவனே. 'அன்யதா சரணம் நாஸ்தி த்வமேவ சரணம் மம' என்று நினைக்கவேண்டும். நம்பிக்கை வேண்டும். அனைத்தும் ஆன ஸ்ரீஹரி நம் விருப்பங்களை பூர்த்தி செய்வான்.

**ஆஷாட பகுள த்வாதசி**

**புதிதாக இரு மனமே**

ஸ்ரீவிஜயதாசர், ஏழு பத்திகள் கொண்ட இந்த பாடலில், சாதனை செய்பவனான மனிதன் எப்படி இருந்து உத்தமகதியை அடையவேண்டும் என்பதை விவரிக்கிறார். இது நமக்குக்

கொடுக்கும் எச்சரிக்கை மணியாகும். சில வாக்கியங்களைப் பார்ப்போம்.

எச்செத்து இது கண்ட்யா மனவே - நம்ம
அச்யுதனங்க்ரிய நெனெ கண்ட்ய மனவே ||ப||

மனிதன் இருப்பதினால் பயன் என்னவென்றால் அவன் சிறந்த இடத்தை / நிலையை அடைவதே. நம்மை இந்த உலகத்திற்கு கொண்டு வந்து சாதனை வழியில் இறக்கிய, அழிவு இல்லாத அச்யுதனின் பாத-கமலங்களை பிடித்து, அவனின் கருணையால் அவனை நினைக்கும், பார்க்கும் பாக்கியம் மனதிற்கு வந்தபோது, இதற்கு தடையாக இருக்கும் அனைத்தையும் விலக்கவேண்டும் என்று மனதிற்கு எச்சரிக்கை விடுக்கிறார். ஸ்ரீஹரியின் பிரசாதத்தைப் பெறுவதற்கு எப்போதும் விழிப்புடன், தோஷங்கள் அற்று இரு என்கிறார்.

ஹாள அரட்டே ஹொடெயபேகு - கால வ்யர்த்த களெயபேகு
பேடதிரிஹஸௌக்யவனு
மாடதிரின்னு துர்ஜன சங்கவனு - சஜ்ஜன த்வாஷவன்னு
நானு எம்புது பிடு கண்ட்யா - ஞானிகளொடனாடு கண்ட்யா |
விஷய ஜீனெந்து மெத்தாரெ அது விஷ கண்ட்யா
அன்ய ஸ்த்ரீயர நோடபேட - அன்ய சாஸ்த்ரவ நோடபேட ||

மேலும் இந்த மனிதப்பிறவியின் சிறப்பினைக் கூறி, இப்படிப்பட்டதை வீணடிக்க வேண்டாம் என்கிறார்.

நரஜன்ம பருவுது கஷ்ட - இதனரிது நோடலு விப்ரத்வவு ஸ்ரேஷ்ட
மரளி பாஹோதே உத்க்ருஷ்ட நம்ம
மருதமத பொந்துவுதெ துர்கட - கௌலவோ மர்கட ||
கோவிப்ரர சேவே மாடோ - ஸோऽஹம் பாவகளபிட்டு தாஸத்வ கொடோ
கேவல வைராக்ய மாடோ - கஷ்ட பரதெ சுக பரது
துஷ்ட விஷயதாஸெ ஜரிது விஜயவிட்டலன்னரிது முக்திய தொரெயது || -- ஸ்ரீவிஜயதாசர்

சஜ்ஜனர்களுக்காக விஜயதாசர் கொடுத்த இந்த அறிவுரை - ஆணைகளைப் பின்பற்றினால் ஸ்ரீஹரியின் கிருபை கிடைப்பதில் சந்தேகமில்லை. தாசர்கள் சஜ்ஜனர்கள் மேல் வைத்த கருணையினால், அனைவரையும் தம்முடனே அழைத்துப் போவதில் உள்ள விருப்பத்தினாலும் இவ்வாறு பாடியிருக்கிறார்.

## ஆஷாட பகுள த்ரயோதசி
## துக்கம் களைவதற்கான பாடல்

தம் சிஷ்யருக்காக விஜயதாசர் இயற்றிய ரக்ஷா-கவசத்தைப் போல, ஸ்ரீஜகன்னாததாசர் சஜ்ஜனர்களின் கஷ்டங்களை போக்குவதற்கு ஒரு சுளாதியை இயற்றிக் கொடுத்துள்ளார். (முழு சுளாதியும் இங்கு கொடுக்கப்படவில்லை).

துரிதவன குடாரி துர்ஜன குலவைரி
சரணாகத வஜ்ரபஞ்சர குஞ்சர
வரஸம்ரக்ஷக ஜன்ம மரணரஹித மஹித
பரம கருணாசிந்து பக்தபந்து
ஸ்வரத ஸ்வதந்திர ஜகத்பரித சித்சுகபூர்ண
ஹரியே க்ஷராக்ஷர புருஷோத்தம
உருகாய வைகுண்ட மந்திர சந்திர
தரணி கோடி சங்காஷ விமல கேஷ
துரதொளக அர்ஜுனன துரக நடெசித சங்கர
பயங்கர லோகைக வீர
நரசிம்ம நின்ன பாதக்கெரகி பேடிகொம்பே
மொரெஹொக்க தாசகெ பந்த பயகள பரி
ஹரிஸி ஸௌக்யவ கருணிஸு தயதிந்த
சர்வாந்தர்யாமி லோகைகஸ்வாமி
ஸ்மரணெ மாத்ரதி அஜாமிளகெ முக்தியனித்தே
அர்தேனோ நீனீக பொரெவுதெம்ம
சர்வ காமத ஜகன்னாதவிட்டல பக்த
பரிபாலகனெம்ப பிருது நின்னதல்லவே -- ஸ்ரீஜகன்னாததாசர்

இந்த சுளாதியில் தாசர் சொல்லியிருக்கும் விஷயங்களைப் பார்த்தால் - தாசரின் அபிரிமிதமான பாண்டித்யம் மற்றும் நடை புரியவருகிறது. சொற்கட்டு, விஷயங்களின் சாரம் இவை மிகச்சிறப்பு.

சுளாதியை நித்ய பாராயணத்திற்கென பக்தர்கள் பாடுவதுண்டு. ‘துக்க பரிகாரக ஸ்துதி’ என்று பெயர் பெற்று சஜ்ஜனர்களின் நலனுக்காக இயற்றப்பட்டது. முழு சுளாதியை தினமும் படிப்பது மிகச் சிறந்த பழக்கமாகும்.

**ஆஷாட பகுள சதுர்தசி**

**எது சரி? எது தவறு?**

ஹரியா நரியதவ ஹல்லவு பல்லரேனு |
ஹரியனரிதவன்ய அரியதித்தரேனு ||ப||

ஹாதினரியத்ஹகலு இருளு நடெதரேனு
ஹாதிபல்லவங்கெ ஹோதரு பிலயிரேனு
வேதசாஸ்திரல்லவதொந்து போதரேனு ஜிஹ்வா
ஸ்வது பிடதவ வைராக்ய மாடரேனு ||1||

பர உபகாரில்லதவ யித்தரேனு
பரிக்ஹித பேள்வனில்லதித்தரேனு
பரசதி பரதன கெரகுவவகெ புண்யவுண்டே நோடி
பரசதி பரதனக்கெரகலு பாபவுண்டே ||2||

விஷய தாஸெவுள்ளவனிகெ விவேகுண்டே யோக்ய
விஷயவரிது புஞ்சிசுவகெ பாப தா உண்டே |
ஹுஸி மாதுகளாடுவங்கெ குஷலவுண்டே நோடு
ஹுசியெ சத்யவெந்தவனிகெ காசுவீசுண்டே ||3||

காமக்ரோத பிடதவனிகெ கதியுவுண்டே விஹித
காமக்ரோத பிட்டவனிகெ புண்யவுண்டே
ஸ்வாமி ப்ருத்ய திளிதவனிகெ ஸிரியு உண்டே இன்னு
ஸ்வாமிகெ ஸ்வாமி அரியதங்கே கதியு உண்டே ||4||

ஹரிய சின்ஹதரிஸிதவகெ சுகவுண்டே நோடு

ஹரிய சின்ஹ தரிசிதங்கே பயவுண்டே |
ஹரிய தாசனாகதவகெ கதியு உண்டே
ஹரிய தாசனெம்புவரிகெ துக்கவுண்டே ||5||

பாத்ரகரியதெ கொட்டத்யாக பலவுண்டே
ஹரிய மரெது நானா விதியு மாடே கதியுவுண்டே |
கர்துகார்ய மூர்த்தி கோபாலவிட்டல நங்க்ரி
அர்து அர்சிசுவகெ அன்யாவார்திவுண்டே ||6|| -- ஸ்ரீகோபாலதாசர்

இங்கு தாசர் சொல்லியிருக்கும் ஒவ்வொரு வாக்கியமும் துக்கங்களைப் போக்குபவை. ஒவ்வொன்றயும் பின்பற்ற முயற்சிப்போமாக.

**ஆஷாட அமாவசை**

**பஞ்ச பேத ஸத்யம்**

த்வைத சித்தாந்தத்தின் முக்கிய தத்வமானது - பஞ்சபேதம். இது நித்யம். சத்யம். ஸ்ரீமதாசார்யர், ஸ்ருதி ஸ்ம்ருதி ஆகமங்களிலிருந்து எடுத்து சமர்ப்பித்த தத்வம் இது. பேதங்கள் அனைத்து இடத்திலும் இருப்பது நிஜம் என்றார்.

ஜீவேஸ்வரபிதா ச்யைவ ஜடேஷ்வரபிதா ததா |
ஜீவபேதோ மிதத்யைவ ஜடஜீவபிதா ததா |
மிதஷ்ச ஜடபேதோSயம் ப்ரபஞ்சோ பேதபஞ்சக: ||

இதன் சாரமாக ஹரிதாசர்கள் தங்கள் பாடல்களில் பாடியிருப்பது:

த்ரிவித ஜீவரிஹரு ஜடதொளகெ
பவ விமோக்ஷ அவரவர கதிகளு
ஜீவ ஜீவரிகெ பேத ஜீவ ஜடரிகெ பேத
இந்து ஞானவு நித்யவாகலெம்து சந்தத
வரத ஸ்ரீபுரந்தரவிட்டலரேய
இந்து ஞானவு நித்யவாகலி எனகெ ||

ஜீவ ஜீவகெ பேத ஜட ஜடகெ பேத
ஜீவ ஜட பரமாத்மரிகெ பேத

ஜீவாஜீவ முக்தாமுக்தர பேத
சம்சாரதொளு பேத முக்தரொடெய
ஹரிபக்தராதீன ஜகத்கர்த்ரு நீ சலஹய்யா புரந்தரவிட்டலா || -- ஸ்ரீபுரந்தரதாசர்

சத்ய ஜகதிது பஞ்சபேதவு நித்ய ஸ்ரீகோவிந்தன
க்ருத்யவரிது தாரதம்யதி கிருஷ்ண நதிகெந்து சாரிரை ||
ஜீவ ஜீவக்கெ பேத சர்வத்ர ஜீவ ஜீவக்கெ பேதவு
ஜீவ ஜட ஜட ஜடக்கே பேதவு ஜீவ ஜட பரமாத்மகெ || -- ஸ்ரீபுரந்தரதாசர்

மோகனதாசர் -- பஞ்ச பேத திளியதவரிகெ மாருதிப்ரியா
மோஹனவிட்டல பொலிவா ||

ஜகன்னாததாசர் -- ஜீவ ஜீவரு பேத ஜட ஜட
ஜீவ ஜட ஜட ஜீவரிந்தலி
ஸ்ரீவரனு அத்யந்த பின்ன விலக்ஷணனு ||
ஜகதுதர நீனாகி ஜகதொளகே நீனிப்பே
ஜகதி ஜீவரனு ஸ்ருஜிசுவி
ஸ்ருஜிஸி ஜீவரொளித்து
ஜகதன்யனெந்து கரெசுவி ||

ஹரப்பனஹல்லி பீமவ்வா:
ஜீவ ஜீவரு பேத ஜீவ ஜடகுபேத
ஜட ஜடக்கெ பேத நினகின்னு நினகெ
பேதாதர்யோன்னொளு பேத புத்தி ப்யாடின்னு ||

கோபாலதாசர்:
ஜீவ ஜீவகெ ஜட ஜடக்கெ பேத |
ஜீவ ஜடக்கெ பேத ஹரிகெ ஜடக்கெ பேத
ஜீவ ஈசகெ பேத ||

ப்ராணேசதாசர்:
ஜீவேசரிகெ பேத, ஜீவ ஜீவகெ பேதா
தேவரிகெ ஜடகு, ஜடக்கெ ஜட பேதா
ஆவாக ஜீவரிகெ ஜடகளிகெ பேதுண்டு
ஈ விதர பேள்வி யன்னாபனிது பேளுவுது ||

'பின்னாஸ்ச பின்னதர்மாஸ்ச பதார்த்த நிகிலா அபி' என்று ஸ்ரீமதாசார்யர், உலகத்தில் உள்ள பொருட்களில் வேறுபாடு உண்டு; பின்பற்றும் தர்மங்களினால் அனைத்திலும் வேறுபாடு உண்டு என்று உண்மை நிலவரத்தை சொல்லியிருக்கிறார்.

'சத்யம் ஜகத்தத்வதோ பேதோ ஜீவகணா: ஹரேரனுசரா:' என்று மோட்சத்தில் பேதம் உண்டு என்கிறார் ஸ்ரீவியாசராஜர்.

புரந்தரதாசர்:
ஒந்தே ஹக்கி ஹண் திந்தைதே |
மத்தொந்தக்கி நோடுததப்ப |
ஹண் திந்தக்கி படவாகைதெ
தின்னத ஹக்கி பலிதைதண்ண ||

இங்கு தாசர், ஈச ஜீவர்களில் இருக்கும் பேதத்தை – வேத புராணங்களில் சொல்லப்பட்டிருக்கும் விஷயத்தை – தெளிவாக எடுத்துரைக்கிறார்.

கோபாலதாசர்:
லோகாலோகதொளு அனேக ஜீவருண்டு
லோகாலோகாசார அனேக கர்மகளுண்டு
லோகாலோகதொளகெ த்ரிவித ஜீவருண்டு ||

இங்கு தாசர் ஜீவ ஜீவர்களில், ஜட ஜடங்களில் இருக்கும் வேறுபாட்டினை விளக்குகிறார்.

'தாசோஹம் தவ தாசோஹம்' என்னும் பாடலில் ஜகன்னாததாசர்:

ஜீவாந்தர்கத ஜீவ நியாமக
ஜீவ விலக்ஷண ஜீவனத
ஜீவாதாரக ஜீவரூப ரா
ஜீவ பஜன ஜனக ஜீவேஷ்வரதவ ||
என்று ஜீவ ஈசனில் இருக்கும் பேதத்தை விளக்குகிறார்.

ஸ்ரீபுரந்தரதாசரும் – எரடு ஒந்தாகது ரங்க, எரடு ஒந்தாகது எந்தெந்திகு' என்று ஈச ஜீவரின் பேதத்தை எடுத்துரைக்கிறார்.

ஈஸ்வர மற்றும் ஜீவனுக்கு இருக்கும் வேறுபாட்டினை ஸ்ரீமதாசார்யர்:

அல்ப சக்திரஸார்வக்ஞும் பாரதந்த்ர்ய மபூர்ணதா |
உபஜீவகத்வம் ஜீவத்வமீஷத்வம் தர்விபர்யய: || -- கீதா தாத்பர்ய

இதை ஜகன்னாததாசர், தமது ஹரிகதாம்ருதசாரத்தில் இவ்வாறு விளக்கியிருக்கிறார்.

அஸ்வதந்த்ரனு ஜீவ ஹரிச
ர்வஸ்வதந்த்ரனு நித்யசுகமய
நிஸ்ஸ்வபத்தல்பக்ஞு சக்த சதுக்க நிர்விண்ண |
ஹ்ருஸ்வதேஹி சனாத ஜீவனு
விஷ்வவியாபக கர்த்ரு பிரம்ம ச
ரஸ்வதீஷாத்யமரனுத ஹரியெந்து கொண்டாடு ||
(ஹரிகதாம்ருதசாரம் 11-3)

ஈச-ஜீவரின் பேதத்தை இவ்வாறு விவரித்திருப்பது மிகவும் சுவாரசியமாக இருக்கிறது. இவர்களைத் தவிர உலகத்தில் இருப்பதி ஜட மட்டும். அசையாப் பொருளான ஜடமும் ஈசனின் கட்டுப்பாட்டிலேயே இருக்கிறது.

ஜீவ ஜட சுவிலக்ஷணனு எந்தரிது நித்யதலி
ஈ விரிஞ்சாண்டதொளு எல்ல டாவினலி திளிதைது பேத
களேவரதொளரிது அச்யுதன பதவைது ஷீக்ரதலி ||

ஒரு பொருளின் இருப்பு (வயது) இன்னொரு பொருளைவிட வேறுபட்டிருக்கிறது. அனாதி காலத்திலிருந்து, அனந்த காலம்வரை - பஞ்சபேதம் என்பது உண்மையானதே ஆகும்.

***

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**